மலர் 15
இதழ் 39

# கல்கி

துன்முகி வரு
சித்திரை 17

## பொருளடக்கம்

29. ஏப்ரல் 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

புறத்தூய்மையை விட அகத்தூய்மையைத்தான் ஆண்டவன் நேசிக்கிறான்

என்பதை விளக்கும் ஒப்பற்ற திரை ஓவியம்

ஏப்ரல் 21 முதல்

சென்னை... ஸ்டார் • கிரௌன்
ராக்ஸி • நூர்ஜஹான்
மற்றும் தென்னாடெங்கும்

சதர்ன் மூவீஸ்

# வேடன் கண்ணப்பா

தமிழ்

டைரக்ஷன்: H.L.N. சிம்ஹா

ஸ்டூடியோ

A.V.M

உரிமையாளர்கள்: டையமண்ட் பிலிம்ஸ் 15, மெக்நிகல்ஸ் ரோட் சென்னை-10



மலர் 15
இதழ் 39

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி ஆண்டு
சித்திரை மீ 17

# நியாயம் பிறக்குமா ?

இந்தியா தேசத்துக்கும் இலங்கை ராஜ்யத்துக்கும் அநாதி காலமாகத் தொடர்பு இருந்து வருகிறது. சரித்திரகால வரலாறுகளும், கலாசாரத் தொடர்பு பற்றிய விவரங்களும், இலக்கியங்களும் இதிகாசங்களும் இதை நமக்கு அறிவுறுத்துகின்றன.

ஒரு சமயம் ராஜாஜி அவர்கள் இலங்கைப் பிரமுகர்களும் இந்தியப் பிரமுகர்களும் கூடியிருந்த மகாசபையில், "இலங்கையையும் இந்தியாவையும் கடல் பிரித்து வைத்திருப்பது போல் தோன்றலாம். ஆனால், கடலுக்கும் கீழே சென்று அடிவாரத்தில் பார்த்தால் இந்திய மண்ணுடன் இலங்கை மண்ணும் ஒட்டிக் கொண்டிருப்பது புலனாகும்!" என்று கூறினார். உண்மையான வாக்கு.

ஆயினும் சில காலமாக இவ்விரு நாடுகளுக்கு மிடையில் அரசியல் ரீதியாக உடன்பாடும் ஒற்றுமையும் இல்லாத சூழ்நிலை நிலவி வருகிறது. காரணம், இலங்கை அரசியலாரின் மனப் போக்குத்தான் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. இலங்கை சுதந்திரம் பெற்ற பிறகு இதுவரை அங்கே மூன்று மந்திரிகள் அதிகார பீடத்தை அலங்கரித்திருக்கிறார்கள். பிரசித்தி பெற்ற சேனநாயகாவும், அவருக்கு அடுத்தாற்போல் அவருடைய புதல்வர் டட்லி சேனநாயகாவும் மூன்றாவதாக ஸர் ஜான் கொத்தலாவலையும் இலங்கையை ஆண்ட காலத்தில் இந்தியர்கள் பிரச்னை அப்படியேதான் இருந்து வந்திருக்கிறது.

முக்கியமாக இலங்கையில் வாழ்ந்து வரும் லட்சக்கணக்கான இந்தியர்களுக்குப் பெரும் அநீதி இழைக்கப்பட்டு வந்தது. இலங்கைவாழ் இந்தியர்கள் யாவரும் பல்லாண்டு காலமாக இலங்கையிலேயே வேரூன்றி வாழ்ந்து வருபவர்கள். இலங்கையின் தொழில் வளத்துக்கும் பொருளாதார சுபிட்சத்துக்கும் பாடுபடும் தொழில் வர்க்கத்தினர். இவர்களை இலங்கையை விட்டுத் துரத்த இலங்கை சர்க்கார் என்னென்னவோ யுக்திகளையும் தந்திரங்களையும் கையாண்டு பார்த்தது.

இலங்கை இந்தியர் பிரச்னையை சௌஜன்ய முறையில் தீர்க்க இந்திய சர்க்கார் அரும்பாடு பட்டார்கள். இதுவரை இந்திய சர்க்கார் எடுத்துக் கொண்ட எல்லா சமரச முயற்சிகளும் வியர்த்தமாகிப் பிரச்னை அப்படியே கட்டை பாய்ந்து மரத்து நிற்கும் அளவுக்கு வந்து விட்டது.

இந்தச் சமயத்தில் இலங்கையில் பொதுத் தேர்தல் நடைபெற்று ஸ்ரீ பண்டார நாயகாவைப் பிரதம மந்திரியாகக் கொண்ட புதிய மந்திரி சபை அமைந்திருக்கிறது.

ஸ்ரீ பண்டாரநாயகா ஒரு சோஷலிஸ வாதி. இவர் இலங்கையின் பிரசித்தி பெற்ற முப்பெரும் அரசியல் கட்சிகளை ஒன்று கூட்டி முன்னணி அமைத்துத் தாமே அதற்குத் தலைவரானார். அதிகாரத்திலிருந்த கொத்தலாவலையின் கட்சியை எதிர்த்து ஸ்ரீ பண்டாரநாயகா அடைந்துள்ள வெற்றி அற்ப சொற்பமானதல்ல. இமாலய வெற்றி என்றே கூறவேண்டும்.

இலங்கையின் வட பகுதியிலும் கிழக்குப் பகுதியிலும் தமிழ் பேசும் மக்கள் பெரும்பான்மையோர் வாழ்ந்து வருகிறார்கள். பெரும் அளவில் வாழும் தமிழர்களின் பாஷை விஷயத்தில் புது மந்திரி சபை நியாயம் தவறி நடந்து கொண்டிருப்பதாகவே கூறவேண்டும். சிங்கள பாஷை மட்டுமே அரசாங்க மொழியாக இருக்கும் என்று ஸ்ரீ பண்டார நாயகா அறிவித்திருப்பதும் தமிழ் மொழியை அலட்சியமாக விட்டிருப்பதும் இலங்கை வாழ் தமிழர்களுக்குப் பெரும் ஏமாற்றத்தை அளித்திருக்கிறது. இலங்கையில் தமிழ் பல காலமாகவே சிங்களத்துடன் சேர்ந்து அரசாங்க

பாஷையாக இருந்து வந்திருக்கிறது. எனவே ஸ்ரீ பண்டார நாயகா இப்பொழுது தமிழையும் அரசாங்கமொழி யாக்குவதற்கு இடையூறு செய்தால் அது தமிழ் மக்களின் மனக்கொதிப்புக்கு இடம் தருவதாகும்.

* * *

‘பாரதத்தின் பிரதமர் ஸ்ரீ நேருஜியுடன் கலந்து பேசி இலங்கை இந்தியர் பிரச்னைக்கு ஒரு முடிவு காண்பேன். இதில் எனக்குத் துளியும் சந்தேகமில்லை’ என்று இலங்கையின் புதிய பிரதமர் வாக்களித்திருக்கிறார். லண்டனில் நடைபெறப் போகும் ‘காமன்வெல்த்’ மகாநாட்டுக்குச் செல்லுமுன் ஸ்ரீ பண்டார நாயகா நேருஜியைச் சந்தித்துப் பேசுவார் என்றும் இலங்கையைக் குடியரசு நாடாக மாற்றி அமைக்கும் விஷயத்தில் நேருஜியைக் கலந்து ஆலோசிப்பார் என்றும் தெரிகிறது. இந்தியாவின் சிநேகமும் தார்மிக பலமும் இலங்கைக்கு எப்போதும் தேவை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. அத்தகைய ஐக்ய உறவை ஏற்படுத்திக் கொள்ள இலங்கை இந்தியர் பிரச்னை ஒரு பெரிய முட்டுக்கட்டையாக இருந்து வருகிறது என்பதையும் நாம் எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமில்லை.

நேருஜி அமைக்க விரும்பும் சோஷலிஸ சமூதாயப் பாதையிலேயே இலங்கைப் பிரதமர் பண்டாரநாயகாவும் தம் நாட்டை மாற்றி அமைக்க விரும்புவதாகக் கூறியிருக்கிறார்.

நேருஜியின் அயல் நாட்டுக் கொள்கை உலக நாடுகளால் போற்றப்படும் கொள்கையாகும். வல்லரசுகள் தங்களுடைய ஆயுதப் போட்டிகளை ஒழித்து உலகத்தில் யுத்த பயமின்றி உலக மக்கள் யாவரும் சமாதானமான சாந்தி வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமென்பதே நேருஜியின் லட்சியம்.

நேருஜியின் லட்சியப் பாதையில் செல்ல விரும்பும் ஸ்ரீ பண்டாரநாயகாவின் ஆட்சிக் காலத்தில் தமிழ் மொழிக்குச் சம அந்தஸ்து அளிக்கப்படுமென்றும், இந்தியர் பிரச்னை சுமூகமாகத் தீர்ந்து இலங்கைக்கும் இந்தியாவுக்கும் நல்லுறவு ஏற்படுமென்றும் நம்புகிறோம்.

# விலைவாசி உயர்வு ஏன்?

சமீப காலமாக, வாழ்க்கைக்கு அத்தியாவசியமான உணவுப் பொருள்களின் விலை விஷம் போல் ஏறி வருவதை நேயர்கள் உணர்ந்திருக்க வேண்டும். அரிசி, பருப்பு, மிளகாய், எண்ணெய் முதலிய வாழ்க்கைக்கு மிகமிக அத்தியாவசியமான உணவுப் பண்டங்களின் விலை ஒன்றரைப் பங்காகவும் இரண்டு பங்காகவும் உயர்ந்திருக்கிறது. சென்ற வருஷத்தில் படி பத்தணாவுக்கு விற்கப்பட்ட அரிசி இப்போது பதினாலணாவாகி யிருக்கிறது. நல்லெண்ணெயின் விலை இரட்டிப்பாகி யிருக்கிறது. இதர நவதான்யங்களின் விலையும் இப்படியே. உப்பு விலை ஒன்றுதான் ஏறக்குறைய அப்படியே இருந்து வருகிறது.

இந்த விலைவாசி ஏற்றத்துக்கு மத்திய சர்க்கார் ஒரு காரணம் சொல்கிறது. மாகாண சர்க்கார் ஒரு காரணம் சொல்கிறது. நமது சென்னை ராஜ்யத்தின் முதல் மந்திரியோ இன்னொரு காரணம் சொல்கிறார்.

ஆகக்கூடி இந்த விலைவாசிகள் உயர்வுக்கான உண்மைக் காரணம் யார் சொல்லுவதாயிருந்தாலும், விலைவாசியின் உயர்வால் பாதிக்கப்படுகிறவர்கள் ஏழைப் பொது மக்கள்தான். இந்த ஏழைப் பொது மக்களில் பெரும்பாலோர் மாதம் ஒன்றுக்கு நூறு ரூபாய்க்குக் குறைந்த வருமான முள்ளவர்கள்; தொழில் ஸ்தாபனங்களிலும் சர்க்கார் இலாகாக்களிலும் உத்தியோகம் பார்க்கும் குமாஸ்தாக்கள். அல்லது, பள்ளிக்கூட உபாத்தியாயர்கள். அல்லது தொழிலாளர்கள்.

விலைவாசி உயர்வுக்குத் தகுந்தபடி அவர்களுடைய வருமானத்தில் உயர்வு ஏற்படவில்லை. பழைய வருவாயைக் கொண்டே உயர்ந்து போன புதிய விலைவாசி நெருக்கடியைச் சமாளிக்க வேண்டி யிருக்கிறது.

மத்திய சர்க்காரும் மாகாண சர்க்காரும் இதை மனத்தில் கொண்டு இந்த விலைவாசி உயர்வை உடனடியாகத் தடுக்கத் தகுந்த முயற்சிகள் எடுத்துக் கொள்ள வேண்டும்.

இது சம்பந்தமாக நமது முதல் மந்திரி கூறும் சமாதானம் நமக்கு ஆச்சரியத்தையும் வியப்பையும் அளிக்கிறது.

சில பேராசை வியாபாரிகள் அதிக லாபத்தைக் கருதி உணவுப் பண்டங்களைப் பதுக்கி விலைவாசியில் கிராக்கியை ஏற்படுத்தி யிருப்பதாகவும் நாளடைவில் இந்த நிலைமை சரியாகி விடும் என்று எதிர்பார்ப்பதாகவும் திரு காமராஜ் சமாதானம் சொல்கிறார். இது பேராசை வியாபாரிகளின் ஏற்பாடு என்பது முதல் மந்திரிக்கு எவ்வாறு புலனாயிற்று என்பது புரியாத ரகசியமாயிருக்கிறது.

விலைவாசி உயர்வுக்கு இன்னும் சில காரணங்களும் கூறப்படுகின்றன. அவையாவன :

1. நாட்டில் முன்னைக் காட்டிலும் மக்களிடையே அதிகப் பணம் செலாவணியில் இருந்து வருகிறது. அதாவது கடந்த இரண்டு மாதங்களில் அதிகப்படியாகச் சுமார் நூறு கோடி ரூபாய் செலாவணிக்கு வந்திருக்கிறது. மொத்தம் ஏற்கனவே புழக்கத்திலுள்ள நோட்டுகளின் மதிப்பு 1400 கோடி. இத்துடன் மேலும் நூறு கோடி இப்போது கூடியிருக்கிறது. இதற்குக் காரணம் மத்திய சர்க்காரின் மாபெரும் திட்டங்களுக்காகக் கோடிக்கணக்கான நோட்டுகள் செலவழிக்கப் படுவதாகும்.

2. உற்பத்தியில் சென்ற வருஷம் பதினொரு சதவிகிதம் கூடியது. அதே சதவிகிதம் விலைவாசியும் கூடிற்று.

ஆனால், இந்த வருஷம் செலாவணி பெருகுவதற்கு ஏற்றபடி பண்டங்களின் உற்பத்தி பெருகவில்லை. உற்பத்தி பெருகினால் சரக்கு மலிந்து விலையும் குறையும்.

ஆனாலும் இந்த நிலைமையை இப்படியே வளர விடக் கூடாது. மத்திய சர்க்கார் தங்கள் கைவசமுள்ள உணவுதானியங்களை மேலும் அதிகரித்துத் தக்க சமயத்தில் அதை மார்க்கெட்

டுக்குக் கொண்டு வந்தால் பண்டங்களின் விலை தன்னால் குறைந்து விடும் என்பதில் சந்தேகமில்லை. நமது 'முதல் மந்திரி இது விஷயத்தில் ஏதோ மந்திரிகளின் திருப்திக்காகக் காரணம் சொல்லி விட்டு "ஆகட்டும் பார்க்கலாம்" என்று சும்மா இருந்து விடாமல் தகுந்த நேரத்தில் தகுந்த நடவடிக்கை எடுக்கத் தயங்க மாட்டார் என்று நம்புகிறோம்.

# பிரச்னை தீர வழி

மிகவும் சிக்கலான காஷ்மீர் பிரச்னை சுமுகமாகத் தீருவதற்காகப் பாரதப் பிரதமர் நேருஜி எவ்வளவு தூரம் பாகிஸ்தானுக்கு விட்டுக் கொடுக்க விரும்புகிறார் என்ற உண்மை சென்ற வாரம் வெளியாகியது. அதாவது பாகிஸ்தான் காஷ்மீரில் ஆக்கிரமித்துக் கொண்ட பிரதேசத்தைப் பாகிஸ்தான் வசமே விட்டு விடத் தாம் தயாரா யிருப்பதாகச் சென்ற வருஷம் நேருஜி பாகிஸ்தான் பிரதமரிடம் கூறினார். இந்த உண்மையையே நேருஜி இப்போது மக்கள் சபையில் வெளியிட்டுள்ளார். சமாதானத்தில் நேருஜிக்கு உள்ள ஆர்வத்தைக் காட்ட இதைக் காட்டிலும் தகுந்த சான்று வேறு எதுவும் தேவையில்லை. சண்டை தீர்ந்து சமாதானம் ஏற்படுவதற்காகக் காஷ்மீரில் ஒரு பகுதியையே தியாகம் செய்யத் துணிந்த நேருஜியின் நேர்மையும் உதாரணமும் சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டும். தங்களுக்குச் சேர வேண்டிய சிறிய பிரதேசத்தைக்கூடக் கைவிட மனமின்றிச் சில நாடுகள் வருஷக் கணக்கில் கோரமான போரில் ஈடுபடும் இந்தக் காலத்திலே, 'சமாதானத்துக்காக, நல்லுறவுக்காக விட்டுக் கொடுக்கிறோம்' என்று நேருஜி கூறியதை நேர்மை உள்ளம் படைத்தவர்கள் அனைவரும் பாராட்டுவார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்த யோசனைக்குக் கூடப் பாகிஸ்தான் இணங்கவில்லை. இந்நிலையில், காஷ்மீர் பிரச்னை தீர முட்டுக்கட்டையாக இருப்பவர்கள் யார் என்பதைச் சொல்லவா வேண்டும்!

அமெரிக்காவிடமிருந்து பாகிஸ்தான் பெற்று வரும் போர்த் தளவாட உதவியும், சீட்டோ, பாக்தாத் இராணுவ உடன்படிக்கைகளும் இந்தியா-பாகிஸ்தான் நல்லுறவுக்குக் குந்தகத்தை விளைவிக்கும் என்ற நேருஜியின் தீர்க்க தரிசனம் இன்று உண்மையாகி வருகிறது. சில தினங்களுக்கு முன் கராச்சியில் கூடிய 'சீட்டோ' நாடுகளின் பிரதிநிதிகள் காஷ்மீர் பிரச்னையில் தலையிட முற்பட்டது ஞாபகமிருக்கலாம். சென்ற வாரம் தெஹ்ரானில் நடந்த பாக்தாத் உடன்படிக்கை நாடுகளின் மகாநாட்டிலும் காஷ்மீர் விஷயமாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதாவது காஷ்மீர் பிரச்னை சம்பந்தமாக 'சீட்டோ' நாடுகளும் பாக்தாத் உடன்படிக்கையில் கலந்து கொண்டுள்ள நாடுகளும் பாகிஸ்தானுக்குப் பக்க பலமாக இருக்கின்றன என்பதே அதன் அர்த்தமாகும். எனினும் மேற்படி நாடுகளின் மிரட்டலுக்காகப் பாரதநாடு தன் நேர்மையான கொள்கையிலிருந்து பிறழாது என்பது நிச்சயம். காஷ்மீர் பிரச்னை தீருவதற்காகப் பாகிஸ்தான் மீண்டும் ஐக்கிய நாடுகள் சபையின் உதவியை நாடப் போவதாகச் செய்திகள் கூறுகின்றன. காஷ்மீர் பிரச்னை தீருவதற்குற்ற நேர்மையான வழி, இந்தியாவுடன் நேரடியாகப் பேச்சு வார்த்தைகள் நடத்துவதுதான்; பிற நாடுகளின் தயவை நாடுவது அல்ல என்பதை இன்னும் பாகிஸ்தான் சர்க்கார் அறிந்து கொள்ளாதது ஆச்சரியமாக இருக்கிறது.

# "கல்கி" மாதச் சிறுகதைப் போட்டி

## பரிசு ரூபாய் நூறு

தமிழ் நாட்டில் இப்பொழுது புது விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. 'எழுத வேண்டும்' 'எழுதவேண்டும்' என்ற துடிப்பு இளம் எழுத்தாளர்கள் மத்தியில் பொங்கிக் கொண்டிருக்கிறது. அதற்கு ஒரு நல்ல வாய்ப்பளிக்கவே இந்தப் புதிய பரிசுத் திட்டத்தை ஏற்படுத்தி யிருக்கிறோம்.

மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லாரும் கலந்து கொள்ளலாம். தமிழ் நாட்டின் சூழ்நிலையை வைத்துச் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம். கதைகள் "கல்கி"யில் ஆறு பக்கத்திலிருந்து எட்டுப் பக்கத்துக்குள் வரும்படி இருக்க வேண்டும். ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும். முந்திய மாதப் பரிசுக் கதை அடுத்த மாதம் வெளியாகும். பிரசுரத்துக்குத் தகுதியுள்ள மற்றக் கதைகள் "கல்கி"யில் பிரசுரமாகும்.

கதைகள் அந்தந்த மாதம் 25ம் தேதிக்குள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர்ந்துவிட வேண்டும். கதைகளின் முடிவு அடுத்த மாத முதல் வாரத்திலேயே அறிவிக்கப்பட்டு விடும்.

கதையின் மீது "கல்கி மாதச் சிறுகதைப் போட்டி" என்று குறித்து அனுப்பி வைக்க வேண்டும்.

# என்ன சேதி?

## இங்கிலாந்தில் ருஷ்யத் தலைவர்கள்

உலகில் எந்த நாடும் எந்த நாட்டுடனும் பகை கொள்ளவில்லை என்ற நிலை ஏற்பட்டால்தான் இன்று எந்த நாட்டிலும் நிலவி நிற்கிற யுத்த பயம் நீங்கி அமைதியான சூழ்நிலை ஏற்படும். கணித நிபுணர்கள் இரண்டு புள்ளிகளை இணைக்கும் குறுகிய தூரம் உள்ள கோடு நேர் கோடுதான் என்று கூறுவார்கள். அப்படியே இரண்டு நாடுகளைப் பிணைக்கும் கோடு அன்புதான். தங்களைப் பரம விரோதிகள் என்று நினைத்து வரும் பிரிட்டிஷ் மக்களிடம் அன்பு செலுத்தி, அவர்கள் உள்ளத்தையும் அன்பையும் கவர ருஷ்யத் தலைவர்கள் துணிந்து பிரிட்டனில் இறங்கிச் சுற்றுப் பிரயாணம் செய்து வருகிறார்கள். பாரத தேச மக்கள் அளித்த வரவேற்புடன் ஒப்பிட்டுப் பார்த்தால் பிரிட்டிஷ் மக்கள் அளிக்கும் வரவேற்பு ஒன்றும் இல்லை என்று சொல்ல வேண்டும். பிரிட்டிஷ் மக்களின் மனோபாவத்தையும் சூழ்நிலையையும் சற்று உன்னிப் பார்த்தால் அவர்கள் அப்படியிருப்பதன் காரணம் தெரிந்து விடும். உண்மையான சமாதான நோக்குடன் சென்றிருக்கும் ருஷ்யத் தலைவர்கள் பிரிட்டிஷ் மக்களின் உள்ளத்தையும், பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் செல்வாக்கையும் பெறுவார்கள் என்று நம்புகிறோம்.

ருஷ்யத் தலைவர்கள் நேருஜியின் பஞ்ச சீலக் கொள்கையில் பரிபூரண நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள் என்பதை நிரூபிக்கும் வகையில் ருஷ்யக் கம்யூனிஸப் பிரசார இயந்திரமாகிய 'காமின்பார்ம்' என்ற ஸ்தாபனத்தைக் கலைத்து விட்டார்கள். ஒரு நாட்டில் ஜனநாயக ஆட்சிமுறை நடைபெறலாம். இன்னொரு நாட்டில் கம்யூனிஸ ஆட்சி முறை நடைபெறலாம். என்றாலும் இந்த இரு நாடுகளும் சிநேகமாக வாழலாம் என்பதே நேருஜியின் பஞ்சசீலக் கொள்கை. இதில் நம்பிக்கை தெரிவித்த பின், பிற நாடுகளில் கம்யூனிஸ ஆட்சி முறை ஏற்படுத்துவதற்காக நிலைநாட்டப்பட்ட 'காமின்பார்ம்' இருப்பதற்குப் பொருளே இல்லை. அதனால்தான் காமின் பார்மைக் கலைத்து விட்டார்கள்.

இப்படிச் சென்ற சில மாதங்களாக ருஷ்யத் தலைவர்கள் தாங்கள் உலக சமாதானத்தை நிலை நாட்டுவதில் கொண்டுள்ள அக்கறையைப் பல காரியங்கள் மூலம் நிரூபித்து வந்திருக்கிறார்கள். இருப்பினும் அமெரிக்க ஜனாதிபதி ஓயாமல் ருஷ்யப் போக்கில் அவநம்பிக்கையைத் தெரிவித்து வருகிறார். ருஷ்யத் தலைவர்களின் பிரிட்டிஷ் விஜயம் அமெரிக்கக் கொள்கையை மாற்றும் அளவுக்கு வெற்றிகரமாக முடிய வேண்டும் என்பதே உலகப் பெருமக்களின் பிரார்த்தனை.

## பாலசுப்பிரமண்யனின் துயரக் கதை

செங்கல்பட்டு கே. பாலசுப்பிரமண்யன் என்கிற சிறுவனைப் பற்றிச் சென்னை சர்க்கார் சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடமிருந்து கிடைத்த தகவல்களை நமக்கு அனுப்பியிருக்கிறார்கள். அதைப் பிரசுரிக்கவும் கேட்கிறார்கள். அதில் காணப்படும் முக்கிய விஷயங்கள்.

பி. ஸி. ஜி. ஊசி போடும் கிரமம் இரண்டு பாகம் ஆகும். முதலில் டூபெர்குலின் ஊசி குத்துவார்கள். அதன் விளைவைப் பார்த்து விட்டு இரண்டாவது ஊசிக்குத்து போடுவார்கள். பையன் பாலசுப்பிரமண்யனுக்கு முதல் ஊசிக்குத்திலேயே எல்லா விளைவுகளும் ஏற்பட்டு விட்டன. இது நடந்த தேதி 3-12-54. அது முதற் கொண்டு பையனுடைய உடல் நிலை மாறிவிட்டது. 1955 ஜூலை மாதத்தில் செங்கல்பட்டு ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டான். ஊசி குத்தினது முதல் ஆறு மாத காலமாக வலது கண் பார்வை கெட்டுப் போனதாகவும், அடிக்கடி வாந்தி எடுப்பதாகவும் சொல்லி ஆஸ்பத்திரியில் சேர்க்கப் பட்டான். தேக நிலை அபிவிருத்தி காணப்பட்டதென்று மூன்று நாள் கழித்து வெளியேற்றப் பட்டான். ஆயினும் அடிக்கடி மயக்கம் தட்டுவதாகச் சுகாதார அதிகாரியிடம் அவனுடைய பெற்றோர்கள் சொல்லிக்கொண்டு வந்தார்கள். முடிவில் செங்கல்பட்டு ஆஸ்பத்திரி அதிகாரிகள் பையனைச் சென்னை கண் ஆஸ்பத்திரிக்கு அனுப்பினார்கள். மூளைக்குள் ஒரு அந்தரங்க அவயவம் கெட்டுப் போயிருப்பதாகச் சந்தேகப்பட்டார்கள். 1956-ம் ஆண்டு ஜனவரி மாதம் 20-ம் தேதி முதற் கொண்டு ஒரு மாதம் கண் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றான். வாந்தியும் ஜுரமும் ஏற்பட்டது. பெப்ருவரி மாதம் 20 ம் தேதியில் ஜெனரல் ஆஸ்

பத்திரிக்கு அனுப்பப்பட்டான். மார்ச்சு மாதம் முதல் தேதி காலை 11-மணிக்கு மூளையைத் திறந்து ஆபரேஷன் செய்யப் பட்டது. அன்று நடு இரவில் பையன் உயிர் நீத்தான்.

கண் ஆஸ்பத்திரியில் கண்ணில் நரம்பு வியாதி யென்றும், ஜெனரல் ஆஸ்பத்திரி யில் மூளைக்குள் 'பெட்யூடரி டியூமர்' என்றும் வைத்தியர்கள் நிர்ணயித்து எழுதி யிருப்பதாக அறிக்கை.

இந்தத் துயரப் புராணத்தைச் சொல்லிக் கோளாறுகள் பி. ஸி. ஜி யினால் அல்ல என்று அரசாங்கத்தார் சந்தோஷமாகச் சொல்லுகிறார்கள். அதாவது இரண்டா வது ஊசிக் குத்தினால் அல்ல முதல் ஊசிக் குத்தினாலேயே ஏற்பட்டது என்பது அவர்களுடைய வாதம். எதனாலாயினும் 3-12-54 ல் நன்றாகப் படித்துக் கொண் டிருந்த பையன் சர்க்கார் ஊசி குத்தினது முதல் நோய்வாய்ப்பட்டு, சர்க்காரின் ரண சிகித்சை செய்யப்பட்டு 1-3-56 ல் மாண்டான்.

நம்முடைய மக்களுக்குச் சொல்லிக் கொள்வதாவது: சுற்றித்திரியும் பி. ஸி. ஜி குழாம் நடத்திவரும் முதல் ஊசிக்குத்தும் வேண்டாம்; இரண்டாம் ஊசிக்குத்தும் வேண்டாம் என்பது.

## போனி பீட்டர்ஸ் கதை

ஏப்ரல் 15-ந் தேதி இதழில் போனி பீட்டர்ஸ் என்ற சிறுமியைப் பற்றிய சர்க்கார் அறிக்கையை வெளியிட்டிருந் தோம். அதில் அப்பெண்ணுக்குச் சர்க் கார் ஆஸ்பத்திரியில் சிகிச்சை செய்யப் பட்டதில் ஐந்து வாரங்களில் கண் சரி யான நிலையை அடைந்து விட்டது என்றும் பார்வையில் அபிவிருத்தி ஏற்பட்டது என்றும் கூறப்பட்டிருந்தது அல்லவா?

ஆனால் சென்ற வாரம் சென்னை லட்சுமி புரம் இளைஞர் சங்கத்தில் ராஜாஜி பி. ஸி. ஜியைப் பற்றிப் பேசிய போது, இந்த போனி பீட்டர்ஸின் தாயாரிடமிருந்து தமக்கு வந்திருந்த கடிதத்தை அந்தப் பொதுக் கூட்டத்தில் வாசித்தார். அது பின்வருமாறு:

"......என் மகள் போனியின் உடல் நிலை சற்றுத் தேறியிருக்கிறது. ஆனால் அவ ளுடைய இமைகளும், கண்களும் முன் போலவே இருக்கின்றன. இப்படியிருக்க அவளை ஆஸ்பத்திரியி லிருந்து ஏன் அழைத்து வந்து விட்டேன் என்று தாங்கள் அறிய விரும்பலாம். நான் நன்றி யற்றவளல்ல. எனினும் உங்களுக்கு உண் மையைச் சொல்லித்தான் ஆகவேண்டும். ஆஸ்பத்திரியில் கொடுக்கப்பட்ட ஆகாரத் தைப் போனியினால் சாப்பிடவே முடிய வில்லை. கட்டிலில் ஓரே மூட்டைப் பூச்சி. ஏதோ சொறி சிரங்கு வந்தவளைப் போல் உடம்பெல்லாம் சொறிந்து கொண்டிருப் பாள். அவளுக்குச் செய்யப்பட்ட சிகித்சை யைப் பற்றியும் கூறி விடுகிறேன். அவ ளுக்கு மாத்திரைகள் சில நாட்கள் வரை கொடுத்து வந்தார்கள். பிறகு நிறுத்தி விட்டார்கள். நிறுத்திய சில நாட்களிலேயே மாத்திரையின் பயன் தீர்ந்து போய்ப் போனி பழையபடியாகி விட்டாள். ஓயாமல் அழுது வந்தாள். ஆஸ்பத்திரியில் இன்னும் சில நாட்கள் இருக்க நேர்ந்தால் அவள் இறந்து விடுவாளோ என்று பயந்து வீட்டுக்கு அழைத்து வந்து விட்டேன். நல்ல சிகித்சை செய்யக் கூடிய வேறு இடத்துக்கு அழைத்துப் போக உத்தேசித் திருக்கிறேன். ஆனால் தற்சமயம் என் னிடம் செலவுக்குப் போதிய பணமில்லை. சிறிது பணம் சேர்ந்ததும் என்னாலானதை அவளுக்குச் செய்கிறேன். அவளை நான் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிய போது ஆரோக்கியமாகவே இருந்தாள். அவ ளுடைய கண்கள் நல்ல நிலைமையிலிருந்தன. தங்களாலான உதவியை எனக்குச் செய் வீர்கள் என்று நம்புகிறேன்."

<u>அட்டைப்படம்</u>

## பூவும் பூவையும்!

"தாமரையாள் சொன்ன கதை சொல்லு — எழிற்
தையலவள் பிறந்த கதை சொல்லு
பூவினங்கள் கூறும் கதை சொல்லு — அந்தப்
பூவையர்கள் பூத்த கதை சொல்லு"

தாமரை மலர் வித்திலிருந்து கிளம்பி எப்படி மலராகிறது என்பது ஒரு சிருஷ்டி இரகசியம். இரவு முழுதும் மொட்டாக நிற்கிற தாமரை, காலையிலே எப்படி இதழ் விரிகிறது! எந்த விரல்கள் அந்த மொட்டைக் கோதிவிட்டன!

சூரியனுடைய பொன் கிரணங்கள் அந்த மொட்டைத் தொட்ட மாத்திரத்தில், என்ன மந்திர சக்தி ஏற்பட்டு விடுகிறது! வண்ணத் தாமரை முகம் மலர்கிறது.

அழகு என்ற இந்த நுட்பமான தத்துவத்தைப் போலவேதான் காதலர்களுடைய இதய பாசமும். தாமரையின் கதையும், பூவினங்கள் கூறும் கதையும், பூவையர்களின் கதை யும் இதய தத்துவத்தோடு பார்த்து அநுபவிக்க வேண்டிய இறைவனுடைய படைப்புக்கள்.

இந்த அழகுத் தத்துவத்தை நமது ஓவியர் 'மணியம்' இந்த இதழில் எழிலோடு கூடிய மூவர்ண அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார்.

## பள்ளி ஆசிரியர்களுக்கு நல்ல செய்தி

சென்ற வாரம் பத்திரிகைகளில் வெளியான ஒரு நல்ல செய்தியை வாசகநேயர்கள் படித்திருக்கலாம். பயிற்சி பெற்ற ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களின் அடிப்படைச் சம்பளத்தை ஐம்பது ரூபாயாகவும், பயிற்சி பெறாதவர்களின் அடிப்படைச் சம்பளத்தை நாற்பது ரூபாயாகவும் நிர்ணயிக்க இந்திய சர்க்கார் முன் வந்திருக்கிறார்கள். பொதுவாக, பள்ளி ஆசிரியர்களின் அந்தஸ்தும், குறிப்பாக ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களின் அந்தஸ்தும் சம்பளமும் உயருவதற்கான எந்த யோசனையையும் எல்லோரும் யாதொரு கருத்து வேற்றுமையுமின்றி ஏகோபித்து ஆதரிப்பார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. மேற்படி யோசனைக்குப் பல ராஜ்ய சர்க்கார்களும் இணங்கியிருப்பதாக இந்திய சர்க்கார் உதவி கல்வி மந்திரி டாக்டர் கே. எல். மாலி சென்ற வாரம் மக்கள் சபையில் அறிவித்தார். அவ்விதம் அதிகச் சம்பளம் கொடுப்பதால் ஏற்படும் உபரிச் செலவில் ஐம்பது சத விகிதத்தை இந்திய சர்க்கார் ஏற்றுக் கொள்ள இசைந்திருப்பதாகவும் டாக்டர் மாலி கூறினார்.

இந்திய சர்க்கார் நிர்ணயிக்க முற்பட்டுள்ள ஐம்பது ரூபாய் தற்போதையச் சம்பள விகிதத்தைக் காட்டிலும் சுமார் பத்து ரூபாய் அதிகமிருக்கலாம். விலைவாசிகள் விஷம் போல் ஏறியுள்ள இக் காலத்தில் ஆசிரியர்களுக்கு ஐம்பது ரூபாய் மாதச் சம்பளம் அதிகமில்லை என்றாலும், ஆசிரியர்கள் விஷயத்தில் சர்க்கார் கவனம் செலுத்த முற்பட்டிருப்பது பாராட்ட வேண்டிய காரியமாகும். ஆரம்ப ஆசிரியர்கள் எல்லோருக்குமே அடிப்படைச் சம்பளத்தை ஐம்பது ரூபாயாக நிர்ணயித்து விடலாம். அதனால் ஏற்படும் உபரிச் செலவில் பாதியை இந்திய சர்க்கார் ஏற்றுக் கொள்ள இசைந்திருப்பதால், ராஜ்ய சர்க்கார்களுக்குத் தாங்க முடியாத பளு எதுவும் ஏற்பட்டு விடாது. எனவே, இந்த நல்ல காரியத்தை ராஜ்ய சர்க்கார்கள் சிறிதும் தாமதமின்றி நிறைவேற்றி வைக்குமென்று நம்புகிறோம்.

## வெயில் ஏற ஏற மூங்கிலும் உயர்கிறது!




உணவுப் பண்டங்களின் விலைவாசி வர, வர உயர்ந்து கொண்டே போவதற்குப் பண வீக்கம் முக்கிய காரணம் என்று சொல்லப்படுகிறது.

# கடல் கொண்ட கனவு

### மூன்றாம் அத்தியாயம்

## சந்திரகாந்தக் கல்

மந்திரநாயகம் நின்ற திசையையே பார்த்த பூபதி, தன் கண்ணுக்கு எதிரே பாய்ந்து வந்த ஜோதியைக் கண்டு திகைப்படைந்தான். அடுத்த கணம் அந்த வீர இளவரசன் சற்றும் தயங்காமல் மேலே நடந்தான்.

வட்டமான பாறையின் மத்தியிலே பாழடைந்த சிற்பங்களைத் தாண்டிச் சென்றால், ஒரு கோவில் இருந்தது. இடிந்தும் இடியாமலும் காட்சி தந்த அந்தக் கோவிலின் வாசலிலே, முகப்பில் ஒரு வலம்புரி விநாயகரின் சிற்பம் நின்றது. அதற்கு முன்புறம் ஒரு கொடி மரம். அந்தக் கொடி மரத்தின் அருகே உயரமான ஒரு பெரிய தூண் போன்ற கோபுரம். கூர்ந்து பார்த்தால் அது ஒரு கோபுரம் மட்டுமில்லை. கண்ணற்ற கடலிலே மிதந்து செல்லும் மரக்கலங்களுக்கு, வழி காட்டுகிற ஒரு கலங்கரை விளக்கம் அது!

அந்தக் கலங்கரை விளக்கத்தின் உச்சியிலே ஒரு சிறு கூண்டு, காற்றாடி போலச் சுழன்று கொண்டிருந்தது. அலைகளிலே தவழும் காற்று அந்தக் கூண்டைச் சுழற்றிக் கொண்டிருந்தது. அதனுள்ளிருந்து தான் அந்தப் பிரகாசமான பெரிய ஜோதி கண்ணைப் பறித்துக் கொண்டு வந்தது.

பூபதி அந்த ஒளிக் கம்பத்தைக் கூர்ந்து பார்த்தான். அதன் உச்சியில்





சுழன்று கொண்டிருந்த கூண்டுக்குள்ளே, ஒரு பெரிய சந்திர காந்தக் கல் பதிக்கப்பட்டிருந்தது. அதுவும் அந்தக் கூண்டோடு சேர்ந்து சுழன்று கொண்டிருந்தது. சந்திரனுடைய நிலவு அந்தக் காந்தக் கல்லிலே பட்டு, எதிர் ஒளியாக அந்தப் பிராந்தியம் முழுதும் 'குபீர்' 'குபீர்' என்று ஒளிக் கற்றையை வீசி வீசிச் சுற்றிக் கொண்டிருந்தது. அதைச் சுட்டிக் காட்டிக் கொண்டே மந்திரநாயகம் சித்திராங்க பூபதியிடம் கீழ்க் கண்டவாறு சொன்னார் :—

"இதுதான் சந்திர காந்தக்கல். கலங்கரை விளக்கத்தில் தினந்தோறும் எண்ணெயும் திரியும் போட்டு விளக்கேற்றுவது கஷ்டமல்லவா? அதனால் நமது முன்னோர்கள் இப்படிப்பட்ட அற்புதமான ஓர் ஏற்பாட்டைச் செய்திருக்கிறார்கள். இந்தச் சந்திர காந்தக் கல்லானது நிலவின் தாரைகளை உட்கொண்டு ஒளி வீசக் கூடியது. அமாவாசை இரவுகளிலுங்கூட, நட்சத்திரங்களின் ஒளியைத் தன்னிடத்தே வாங்கி, அதை அப்படியே பிரதிபலித்துச் சுழன்று கொண்டே கண் சிமிட்டும் சக்தி வாய்ந்த அபூர்வமான காந்தம். இந்த எல்லை முழுவதும் குன்றுப்பிரதேசமாக இருப்பதால், இந்தப் பக்கமாக வரும் கப்பல்களுக்கு எச்சரிக்கை செய்கிறதோடு, இந்த வலம்புரித் தீவுக்கு ஒரு அடையாளமாக இந்த வெளிச்சம் நின்று, கடலிலே செல்கிறவர்களுக்குத் திசை காட்டவும் செய்கிறது!" என்றார் வலம்புரியின் தலைமை மந்திரி மந்திரநாயகம்.

பூபதி அந்தக் கலங்கரை விளக்கத்தைப் பார்த்துக் கொண்டே மேலே நடந்தான். வட்டப் பாறையின் எல்லை விளிம்புக்கு வந்தார்கள் இருவரும். அதன் மூலையிலே ஒரு குகைப் பாறையிருந்தது. அந்தக் குகைக்குள் கடல் தண்ணீர் புகுந்தோடித் திரும்ப வந்து கொண்டிருந்தது. ஆனால் இதென்ன? அந்தக் குகைக்குள்ளேயிருந்து சோகம் நிரம்பிய ஒரு பெண்ணின் அழுகுரல் கேட்கிறதே!



சித்திராங்க பூபதி மெய்சிலிர்த்து நின்றான். யாரோ ஒரு பெண் விம்மி விம்மி அழுங்குரல் மிக அருகிலே கேட்டது.

"பூபதி! அந்த இடத்தில் நிற்காதே. இங்கே வந்து விடு!" என்றார் மந்திரநாயகம்.

"பெரியவரே! இதென்ன குரல்? நெஞ்சை என்னவோ செய்கிறதே. கேட்டீர்களா?" என்றான் பூபதி.

"ஆமாம். இதுதான் இந்த வலம்புரித் தீவைக் காவல் செய்கிற கன்னித் தெய்வம். அந்தப் பெண் தெய்வத்தின் விம்மல்தான் இந்த நிசி நேரத்திலே இப்படி நெஞ்சை உருக்குகிறது!" என்று மந்திரநாயகம் சொன்னார்.

"தீவின் தேவதையா? தேவதை அழுகிற குரலா இது? என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்?"

"ஆமாம், கடந்த நூறு ஆண்டுகளாக இந்தத் தீவிலே ஒலிக்கிற அழுகுரல் இது! குமாரா! நீ அங்கே நில்லாதே! இங்கே வந்து விடு!" என்று சொன்னார் மந்திரி. அவருடைய உடம்பெல்லாம் பதற்றத்தோடு ஆடியது.

"தேவதையாவது! அழுகிறதாவது!" என்றான் சித்திராங்கன்.

"சரி; நீ வாலிபன் அல்லவா? நம்பமாட்டாய். அதுவும் நல்லதுக்குத்தான். நீ நம்பாதவரை எனக்குக் கவலையில்லை. நம்பினால்தானே துயரம்!" என்றார் பெரியவர்.

"நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லையே! தேவதை அழுகிறது என்றீர்கள். நூறு ஆண்டுகளாகக் கடலிலே கண்ணீர் வடிக்கிறது என்று சொன்னீர்கள். ஒரு தேவதை எதற்காக இப்படித் துயரப்படவேண்டும்? அது தான் நம்ப முடியவில்லை

என்னால்!" என்று மீண்டும் பூபதி தயக்கத்தோடு சொன்னான்.

"நீதான் நம்பவில்லையே. ஏன் அதைப் பற்றிக் கேட்கிறாய்?" என்றார் மந்திரநாயகம்.

"நம்பவில்லை. ஆனாலும் உங்களுடைய நம்பிக்கையைத் தெரிந்து கொள்ளலாம் அல்லவா? சொல்லுங்களேன்!" என்று கூறி, நிலவின் ஒளியிலே பாறைத் திட்டு ஒன்றில் உட்கார்ந்தான் சித்திராங்கன்.

"நீ நிச்சயம் நம்ப வில்லை என்று உறுதி கூறு. அப்படியானால் அந்த விவரத்தை உனக்குச் சொல்கிறேன்" என்றார் பெரியவர்.

"நிச்சயம் நம்பவில்லை. தைரியமாகச் சொல்லுங்கள்" என்றான் இளவரசன். மந்திரநாயகம் பேச ஆரம்பித்தார்.

"பூபதி! இந்த வலம்புரித் தீவின் அதிதேவதை இருக்கிறதே, அந்த தேவதைதான் விம்மி விம்மிக் கண்ணீர் வடிக்கிறது. கடந்த நூறு வருஷங்களாக இப்படிக் கண்ணீர் வடித்துக் கொண்டிருக்கிறது. அதன் கண்ணீரைத் துடைப்பதற்கு இது நாள் வரை யாரும் வரவில்லை. அது தான் இந்த வலம்புரித் தீவின் துயரக் கதை" என்று சொல்லிப் பெருமூச்சு விட்டுக் கொண்டே பெரியவர் மீண்டும் தொடர்ந்து பேசினார்.



"இந்த வலம்புரித் தீவு, எத்தனையோ பல நூற்றாண்டுகளாகக் கடலின் மத்தியிலே கம்பீரமாக எழுந்து நிற்கும் ஒரு புராதனமான நிலப் பரப்பு. ஆதியில் பாண்டிய அரசர்களுக்குச் சொந்தமான ஒரு கிளை ராஜ்யமாக இது இருந்தது. என்றாலும், தமிழ் நாட்டின் பழம்பெரும் வேந்தர்களான சேர சோழ பாண்டியர்கள் மூவருமே, இந்தத் தீவின் வளர்ச்சியில் ஏகோபித்த பக்தியுடன் கண்ணும் கருத்துமாக இருந்தார்கள். இதன் ஆட்சிப் பொறுப்புக்கு மூவேந்தர்களும் ஒன்று சேர்ந்து அனுப்பிய பிரதிநிதியே பட்டத்தில் அமர்த்தப்பட்டான். காரணம், இந்த மூவேந்தர்களும் தங்களுக்குள் அரசியல் காரணமாகப் பல சண்டைகளில் மோதிய போதிலும், வெளி நாட்டவர்களின் படையெடுப்புக்களிலே தமிழ் நாடு எப்படியெல்லாமோ திக்குமுக்காடிய சமயத்திலும், தமிழ் நாட்டின் புராதனக் கலைகளான சிற்பமும், ஓவியமும், இசையும் அரசியல் மாறுதல்களை யெல்லாம் தாண்டி, அரசியலுக்கு அப்பால் நின்று, ஓங்கி வளர வேண்டும் என்று ஆசைப் பட்டார்கள் முத்தமிழ் வேந்தர்கள். இதனால் தான் குகைகளிலும் தீவுகளிலும் தமிழ் மன்னர்கள், தங்களுடைய சிற்பம், ஓவியம், இசை முதலிய கலைகளை நிர்மாணித்துப் பாதுகாத்து வளர்த்தார்கள். படையெடுப்புக்களினால் இந்தக் கலைகள் பாதிக்கப் படாத முறையில் இவற்றைக் காப்பாற்றினார்கள். இதே நோக்கத்தோடுதான் தமிழ் நாட்டிலிருந்து கை தேர்ந்த சிற்பிகளையும், ஓவியர்களையும், இசைவாணர்களையும் இந்தத் தீவுக்கு அனுப்பி, இங்கே ஒரு குடியிருப்புத் தோன்றி வளரும்படி செய்தார்கள். இதோ நீ காணும் சிற்பங்களும், இசை அற்புதங்களும் தமிழ் மன்னர்களுடைய அந்தக் கலைக் கனவின் சிதைந்த துண்டுகள்!"

இவ்வாறு சொல்லி, ஒரு கணம் மௌனத்தோடு ஏக்கப் பெருமூச்சு விட்டார் பெரியவர். அப்பொழுது பூபதி கேட்டான்:

"மந்திரநாயகம்! நீங்கள் சொன்ன வரலாறு சரி. ஒப்புக் கொள்கிறேன். ஆனால் தமிழ் மன்னர்களுடைய அந்த உன்னதமான கனவு ஏன் இப்படிச் சிதைய வேண்டும்? அவர்களுடைய மகத்தான அந்த இலட்சியங்கள் எல்லாம் ஏன் இப்படி உருக்குலைய வேண்டும்? எதற்காக இந்த வலம்புரித்



தீவின் தேவதை இப்படிக் கண்ணீர் வடிக்க வேண்டும்?''

இக்கேள்விக்கு மந்திர நாயகம் பதில் சொன்னார்:

"பூபதி! இந்த வலம்புரி விநாயகருக்கு அருகே நிற்கும் இந்தக் கோவில்தான் வலம்புரி யம்மனின் புனித இருக்கை. இது சென்ற நூற்றாண்டுவரை மகோன்னதமான புண்ணியத்திருக் கோவிலாக விளங்கியது. இந்தக் கோவிலிலேதான், மல்விநாயக யாழ்ப்பாணர் என்ற ஒரு முதியவர் இருந்தார். அவரிடமிருந்த பேரியாழ் என்ற தெய்விகமான இசைக் கருவி, இந்தக் கோவிலின் அர்த்தஜாம பூஜையின் போது தேவதைகளை ஆவாகனம் செய்து

மணியம்—

வந்த புனிதமான வாத்தியம். மல்லி நாயக யாழ்ப்பாணர் அம்மன் சந்நிதியிலே அமர்ந்து, பௌர்ணமி இரவுகளிலே, நடுநிசி நேரத்தில், யாழை மீட்ட ஆரம்பித்தார் என்றால், வானத்திலுள்ள தேவதைகள் எல்லாம் இந்தப் பூமியிலே இறங்கி வரும். வலம்புரி அம்மன் தனது பரிவாரங்களோடு வந்திறங்கி, இந்தத் தீவிலே கொலு இருப்பாள். அப்படிப் பட்ட அதிசயக் கலைஞர், தமது பேரி யாழிலே தாரத்தாக்கம் என்ற பழந் தமிழ் இசை முறைப்படி, அற்புதம் அற்புதமான பண்களை அமுத தாரையாகப் பொழிந்து வந்தார். அவருடைய விரல்களிலே நீல வானமும், விண்மீன்களும், பூரண சந்திரனும், பொங்குகிற கடலும் நாத உருவிலே வந்து



நின்று உறவாடும்! அப்படிப் பட்ட யாழ்ப்பாணர், பழந் தமிழ் இசை அறிஞர்கள் கண்ட பூரணமான பண்களை, பண்திறம் என்றும், பண் திறத்திறம் என்றும் ஜன்யராகங்களாகப் பிரித்து, அநேக அபூர்வமான கற்பனைகளைத் தந்திகளிலே தோற்றுவித்து, வான மண்டலத்துக்கு அனுப்பிக் கொண்டிருந்தார். தூரம் தொலையில் கப்பல்களிலே செல்லும் பிரயாணிகள் எல்லாம் ஜாம வேளையிலே, கடல் அலைகளில் தவழ்ந்து வரும் அவருடைய தெய்விக இசையைக் கேட்டு மெய்ம் மறந்து நிற்பார்கள். திசையனைத்தும் அவருடைய புகழ் பரவியது. காஞ்சிமா நகரத்திலே ஆட்சி புரிந்து வந்த மகேந்திரவர்ம பல்லவன் செவியிலும் இந்த யாழின் புகழ் கேட்டது.

"மகேந்திர வர்மன் சென்ற நூற்றாண்டில் தமிழ் நாடு முழுவதையும் ஒருசேர ஆண்டு வந்த மகா பராக்கிரமசாலி. சங்கீதத்திலே பெரிய நிபுணன். பரிவாதினி என்ற வீணையிலே அவன் பல புதிய இசை வடிவங்கள் வகுத்து, அந்த நுட்பங்களையெல்லாம்* குடுமியாமலையிலே நிரந்தரமான கல் வெட்டுக்களாகச் செதுக்கிக் கொண்டிருந்தான். ருத்ராசாரியர் என்ற இசை ஞானியின் தலைமையில், அவன் யாழின் திறங்களை ஆராய்ந்து கொண்டிருந்த சமயத்தில், மல்லிநாயக யாழ்ப்பாணரது இசையின் மகிமையும் அவன் செவியை எட்டியது. உடனே வலம்புரித் தீவுக்கு அழைப்பு அனுப்பினான்.

"மல்லி நாயகர் பழந் தமிழ் நாட்டு இசை ஞானத்தைத் தனக்குப் பின்னால் பாதுகாக்கக் கூடிய நல்ல சிஷ்யன் ஒருவனை நாடிக் கொண்டிருந்த சமயம் அது! அந்தத் தருணத்திலே மகேந்திர பல்லவ மன்னனின் அழைப்பு வந்ததும், யாழும் கையுமாகக் காஞ்சி மாநகரத்துக்குப் புறப்பட்டு விட்டார் பாணர்.

"பூபதி! நம்முடைய வலம்புரித் தீவின் பாணர் இந்தத் தீவை விட்டுச் சென்று நூறு ஆண்டுகள் ஆகி விட்டன. அவர் சென்ற பிறகு, அவரைப் பற்றிய எவ்விதச் செய்தியும் நமக்கு எட்டவில்லை. மகேந்திரவர்மன் காலத்திலும், அவனுடைய மகன் நரசிம்ம பல்லவன் காலத்திலும், தமிழ் நாட்டிலே போரும் படையெடுப்புகளுமாகக் குமைந்து கொண்டிருந்தன. இந்தக் குழப்பங்களுக்கு மத்தியிலே மல்லி நாயக யாழ்ப்பாணர் என்ன ஆனார் என்றே தெரியவில்லை. அவர் மறைந்த வினாடியிலிருந்து, இந்த அம்பிகை சந்நிதியில் தெய்வ கீதத்தின் புண்ணிய ஒலி நின்றது. தேவதைகளும், வானவர்களும் நடமாடிய இந்தப் புனிதத் தீவிலே காரிருள் கப்பிக் கவிந்தது. ஏழு சுரங்களுக்குள்ளே கட்டுப்பட்டு ஒலிக்கும் ஒரு ராகத்தைப் போல, வரம்புக்குள்ளே அலை வீசிக் கோஷித்துக் கொண்டிருந்த இந்தக் கடலானது, யாழின் இசை நின்றபிறகு, எல்லையை மீறிப் பொங்க ஆரம்பித்து விட்டது. இந்தக் கோவிலும் சருமி தவறிச் சிதைந்த

---

* இசைக் குறிப்புகள் அடங்கிய இந்தக் கல்வெட்டுக்களைப் புதுக்கோட்டைக்கு அருகிலே உள்ள குடுமியாமலைக் கோவிலில் இன்றும் காணலாம்.

ஒரு வீணையைப் போல, ஜீவ நரம்புகள் எல்லாம் சிதைந்து குடமும் உடைந்து கிடக்கிறது. வலம்புரித் தீவின் கலை வளம் மங்க ஆரம்பித்து விட்டது. தமிழ் நாட்டின் மூவேந்தர்களும் இன்று குறுநில மன்னர்களைப் போல, எங்கெங்கோ சிதறிப் போய்க் கிடக்கிறார்கள். இதையெல்லாம் கண்டு உள்ளம் வெந்து போய், வலம்புரித் தீவின் தேவதை விம்மி விம்மிக் கண்ணீர் வடிக்கிறது!''



இவ்வாறு சொல்லி முடித்ததும் பெரியவரும் விம்மி விட்டார்! எதிரே யிருந்த பூபதியோ, அப்படியே உடலும் உள்ளமும் உருகிக்கொண்டே பாறையில் அசைவற்று இருந்தான்.

'' என்ன பூபதி! நீயும் கவலையில் ஆழ்ந்து விட்டாய். தேவதை அழுவதை நம்பவில்லை என்று சொல்லி விட்டு, இப்பொழுது ஏன் இப்படி உருகி உட்கார்ந்து விட்டாய்?'' என்று கேட்டார் பெரியவர். சித்திராங்கன் சொன்னான்:

''வலம்புரித் தீவுக்கு ஒரு காவல் தெய்வம் இருக்கிறது என்றும், அது நூறு வருஷங்களாகக் கண்ணீர் வடிக்கிறது என்றும் சொன்னீர்கள்! அதை நம்பினாலும் நம்பா விட்டாலும், நிச்சயம் தமிழ்த் தெய்வம் என்று ஒன்று இருக்கிறது, அது கண்ணீர் வடிக்கவே வடிக்கிறது என்பதை நம்புகிறேன். தெய்வத் தமிழ் நாட்டு மூவேந்தர்களும் கண்ட புனிதக் கனவு, இப்படிச் சிதைந்து போவதை எண்ணித் தமிழ்த் தாய் நிச்சயம் கண்ணீர் வடிக்கிறாள். அதை நம்புகிறேன். தமிழ் நாட்டின் பழம் பெரும் இசைக் கருவியான பேரி யாழ், எந்த வினாடி இந்தத் தீவிலிருந்து நீங்கியதோ, அந்த வினாடியே கலையரசி, கலைத் தேவியும் இங்கிருந்து கடலுக்குள்ளே குதித்து விட்டாள். நிச்சயம் நம்புகிறேன். அதோடு மட்டுமில்லை. நீங்கி மறைந்த அந்தக் கலைமகளை மீண்டும் இந்தத் தீவிலே கொண்டு வந்து நிலை நாட்டி, அவளுக்குக் குடமுழுக்குச் செய்து, விழா எடுக்க வேண்டும். அதன் அவசியத்தையும் உண்மையையும் நிச்சயமாக நான் நம்புகிறேன்!''

இப்படிச் சொல்லும் போது சித்திராங்க பூபதியின் உடம்பெல்லாம் பதறியது.

'' குமாரா! இதனால் தான் இந்தப் பக்கம் உன்னை வர வேண்டாம் என்று உன் தாயார் தடுத்தார்கள். இதனால் தான் நீ இங்கே ஏன் வந்தாய் என்று ஆரம்பத்திலேயே நானும் உன்னைக் கேட்டேன்!'' என்றார் பெரியவர்.

''ஏன் வரக்கூடாது? ஏன் என்னை நீங்கள் தடுக்க வேண்டும்?'' என்று வேகத்தோடு கேட்டான் சித்திராங்கன்.

'' நரசிம்ம பல்லவன் காலத்திலும், அதற்குப் பிறகு வந்த பல்லவர் காலத்திலும், பின்னர் 'வாத்திய வித்தியாதரன்' என்ற சிறப்புப் பெயரோடு விளங்கிய ராஜசிம்மன் காலத்திலும், காஞ்சியில் இசை ஆராய்ச்சி தொடர்ந்து நடந்தது என்று தெரிகிறது. அந்தப் பேரரசர்களின் ஆட்சிக் காலத்தில் காஞ்சிமா நகரத்துக்குச் சென்று இந்த வீணையைக் கண்டு பிடித்து, மறைந்து சென்ற யாழிசையை, மீண்டும் வலம்புரியிலே கொண்டு வந்து நிலைநிறுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு, கடல் கடந்து போன உனது குலாதிபதிகளும், உன்னுடைய தாயாதிகளும் பலர். ஆனால் அவர்களில் யாரும் இந்த வலம்புரித் தீவுக்குத் திரும்பி வரவில்லை. இன்றோ பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன்

பட்டத்துக்கு வம்சம் இல்லாமல் இறந்து விட்டானும். நாடே குழப்ப மாக இருக்கிறதாம். இந்த நிலையில் பேரி யாழைக் கவனிப்பார் யார்? பழந் தமிழ் நாட்டின் பேரி யாழை யும் அதன் புனிதமான இசையை யும், இனி மறந்து விட வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. அதனல் தான் உன்னை இங்கே வர வேண் டாம் என்று அரசியார் தடுத் தார்கள். அதனுல்தான் நீ இந்தப் பாதையின் பக்கம் வருவதை நானும் விரும்பவில்லை!'' என்று சோகத்தோடு கூறினர் மந்திரநாயகம்.

"பெரியவரே! என்னுடைய வார்த் தைகளைக் கொஞ்சம் பொறுமை யோடு கேளுங்கள். வலம்புரித் தீவின் அரசியார் என்னுடைய தாயார் என்பது சாமான்யமான உண்மை. தாய் என்ற சாதாரண நினைவை மறந்து விட்டு, தான் இந்தத் தீவின் மகாராணி என்ற மகத்தான உண் மையை அவர்கள் எப்போதும் மனத் தில் நினைவு வைத்துக் கொள்ள வேண் டும். ஒரு தாய்க்கு மகன் என்ற ஒரே கவலைதான். ஆனல் ஒரு அரசிக்கோ குடிமக்கள் என்றும், தன்னுடைய நாடு என்றும் தான் கவலை. என்னு டைய அன்னை இந்த வலம்புரித் தீவின் பேரரசி. அவளுடைய பிள்ளைப் பாசத்தை மறந்து விட்டு, ஒரு பேரரசி யின் கடமை என்ன என்பதை எண் ணிப் பார்க்க வேண்டும். அப்படி அவள் எண்ணிப் பார்க்கும்படி செய்ய வேண்டியது, மந்திரநாயகமாகிய உங்களுடைய முழுமுதற் கடமை. புரி கிறதா?'' என்று சீற்றத்தோடு கேட்டான் பூபதி.

"சித்திராங்கா! என்ன பேசு கிருய் நீ! தமிழ் நாட்டு வானத்திலே இன்று கருமேகங்கள் சூழ்ந்து கொண் டிருக்கின்றன. காஞ்சிபுரத்திலே பட் டம் சூடுவதற்கு ஆள் இல்லாமல் மறைந்து விட்ட பரமேசுவர வர்ம னேடு, சிம்மவிஷ்ணுவின் பரம்பரையே நின்று போய் விட்டது. இந்த நிலை யில் பொது மக்களும், பிரதானிகளும் கூடி யாரோ ஒரு தாயாதிச் சிறுவனை அரசனக முடிசூட்டுகிருர்கள் என்று நாகபட்டினத்திலிருந்து வந்த ஒரு கடல் வணிகர் சொன்னர். நாடு முழுவதும் ஒரே கொந்தளிப்பாக இருக்கிறதாம். சேர சோழ பாண்டி யர்கள் எல்லாம் பல்லவப் பேரரசை வீழ்த்துவதற்கு இதுதான் சமயம் என்று ஒன்று சேர்கிருர்களாம். சித்திர மாயன் என்பவனுடைய சூழ்ச்சி வேறு அந்தப் புதிய அரசச் சிறுவனுக்கு ஏதேதோ வஞ்சக வலை விரிக்கலாம் என்று சந்தேகப்படுகிருர்கள். நாடு முழுவதும் ஒரே பயத்தில் ஆழ்ந்திருக் கிறதாம். சளுக்கியர்கள் வேறு தமிழ் நாட்டின்மீது படை யெடுப்பதாகப் பயமுறுத்துகிருர்களாம். இத்தனை குழப்பமான சூழ்நிலையில் நீ சற்றும் யோசித்துப் பாராமல் என்ன சொல் கிருய்?'' என்று பதறினர் பெரியவர்.

"சொல்கிறேன், கேளுங்கள் நான் சொல்வதை. இந்த வானமும், இந்த நீலக் கடலும், இந்தப் பௌர்ணமிச் சந்திரனும், இதோ பாழடைந்து நிற் கும் இந்தக் கோவிலும் சாட்சி. இதோ சத்தியம் செய்கிறேன். மந்திர நாயகமே! வலம்புரித் தீவின் கலைச் செல்வமாகிய அந்த யாழை நான் மீட் டுக் கொண்டு வருவேன். அந்த யாழின் இன்னிசை இந்த வலம்புரித் தீவிலே ஒலிக்கத் தொடங்குகிற புண்ணிய வேளையிலேதான், இந்தச் சித்திராங் கன் இந்தத் தீவின் அரசனகப் பட்டம் சூடுவான். அவனைச் 'சென்று வா' என்று அனுப்புவார் மந்திரநாயகம். அவனுடைய நெற்றியிலே குங்குமத் திலகம் இட்டு, 'யாழோடு மீண்டு வா, குழந்தாய்!' என்று அவனைக் கப்ப லேற்றுவாள் அவனுடைய அன்னை. அதாவது இந்தத் தீவின் பேரரசி. இது உறுதி. இது சத்தியம்! யாழை மீட்டிக்கொண்டு வருவதோடு, வலம் புரித் தீவு இப்படி ஒரு பரிதாப நிலையை அடைந்ததற்கு உண்மையான காரணம் என்ன என்பதையும், பகுத் தறிவோடு தெரிந்து வருவேன்.''

மந்திர நாயகத்தின் வலது கையிலே தனது வலது கையை ஓங்கி யடித்து உறுதி செய்தவாறு, மறு பக்கம் திரும் பிப் பாறைகளிலே துள்ளிக் கொண்டு ஓடினன் சித்திராங்க பூபதி.

"குமாரா! எங்கே ஓடுகிருய்?'' என்று பதறி எழுந்தார் பெரியவர்.

திரும்பியே பாராமல் பாறைகளிலே குதித்தோடிய இளவரசனின் மேனி யிலே, ஒளிக் கற்றையைச் சிதறியது சந்திரகாந்தக் கல். (தொடரும்)

# ப்ளிட்

## வீட்டிலுள்ள பூச்சிகள் எல்லாவற்றையும் கொல்லுகிறது!

ப்ளிட்டில் ஆறு சக்திவாய்ந்த கலப்புப் பொருள்கள் சேர்ந்துள்ளன. ஒன்றுக்கொன்று இவைகள் இணைந்து வேலை செய்வதால் எல்லா பூச்சிகளும் நிச்சயமாகக் கொல்லப்படுகின்றன. இதனால்தான் ப்ளிட் மிகுந்த மதிப்புக்குரிய பொருளாக விளங்குகிறது — நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு அணாவிற்கும் ப்ளிட் அதிகப்படியான வீட்டுப் பூச்சிகளைக் கொல்லுகிறது.

சிவப்பு, வெள்ளை, மற்றும் நீல நிற டின்களில் கிடைக்கும். ப்ளிட்டை இன்றே வாங்கி, வியாதிகளுக்குக் காரணமான பூச்சிகளைக் கொல்லுங்கள்.




### ப்ளிட் உபயோகிப்பது பற்றிய சில குறிப்புகள்

பூச்சிகள் நடமாடும் மூலை முடுக்குகளை பிரத்யேகமாக கவனித்து ப்ளிட்டை தாராளமாகத் தெளியுங்கள்

உணவுப் பொருள்களிலிருந்து ப்ளிட்டை தள்ளியே வையுங்கள்— இது மனிதர்களுக்கு தீங்கு விளைவிக்காது. ஆனால் உணவின் ருசியைக் கெடுத்துவிடக்கூடும்

ப்ளிட்டை தெளிப்பதற்குமுன் கதவுகளையும் ஜன்னல்களையும் சாத்துங்கள்—இது ப்ளிட்டின் திவலைகள் எங்கும் பரவி கீழே படிய உதவியாகவிருக்கும்

அலமாரிகளிலும், டிராயர்களிலும் ப்ளிட்டைத் தெளியுங்கள். இந்த இடங்களில் பூச்சிகள் உற்பத்தியாகி, வளருகின்றன

**ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி** (யுனைட்டெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது: கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

# கோகலே மன்றத்தில் பேராசிரியர் கல்கி

பெரியவர்கள், மகான்கள், தேசத்துக்கும் மொழிக்கும் அரிய தொண்டாற்றியவர்கள் ஆகியோர்களை மறக்காமல் இருப்பதற்காக, அவர்களுக்கு ஞாபகச்சின்னங்கள் நிலைநாட்டுவதும், அவர்கள் திருவுருவப் படங்களைத் திறப்பதும் தொன்றுதொட்டு மனித குலத்தில் வந்திருக்கும் வழக்கம்.

ஒரு தலைவருடைய திரு உருவப்படத்தைத் திறப்பதால் அவருடைய போதனைகளைப் பரப்புவதற்கும், பின்பற்றுவதற்கும் மக்களுக்கு அது பேருதவியாக இருக்கும்.

ஒரு பேராசிரியருடைய படத்தைத் திறந்து வைத்தால் பொது மக்கள் எல்லாரும் அவருடைய நூல்களை அதிகமாகப் படிக்கும்படி தூண்டும் என்பதில் சந்தேகமில்லை.

** ** **

சென்ற வாரத்தில் சென்னை ஒய். எம். ஐ. ஏ. ஸ்தாபனத்தின் சார்பில் கோகலே மன்றத்தில் பேராசிரியர் கல்கியின் திருஉருவப் படம் புதுக்கோட்டை சப்-ஜட்ஜ் திரு மகராஜன் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது.

இந்தத் திரு உருவப்படத் திறப்புவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. கற்றோரும் மற்றோரும் சபையில் திரளாக வந்து கூடியிருந்தனர். திருவுருவப் படத் திறப்பு விழாவுக்கு ராஜாஜி அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்பித்தார்.

ராஜாஜி அவர்கள் திரு மகராஜன் அவர்களைச் சபைக்கு அறிமுகப்படுத்திய விதத்தை மறக்கவே முடியவில்லை. "ரசிகமணி, கல்கி, நான், மகராஜன் எல்லாரும் தமிழ்த் தெய்வத்தை வழிபடும் ஒரு கோஷ்டியைச் சேர்ந்தவர்கள். அதாவது வேறுபாடு இல்லாத உணர்வோடு வழிபடும் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள். ரசிகமணி அவர்களுடன் மகராஜன் இலக்கியக் கடலில் மூழ்கித் திளைத்தவர். கல்கியின் எழுத்துக்களை அனுபவித்து ரசித்தவர். அவர் கல்கி படத்தைத் திறப்பது மிகப் பொருத்தமானது" என்று கூறினார்.

திரு மகராஜப் பின்னை பேராசிரியர் கல்கியின் படத்தைத் திறந்து வைத்துவிட்டு இலக்கியச் சுவை நிரம்பிய அருமையான சொற்பொழிவாற்றினார். அவருடைய பேச்சில் தமிழ் கும்மாளம் போட்டுக் கொண்டு எத்தனை எத்தனையோ உருவங்களுடன் பவனி வந்தது. கல்கியின் தமிழ் நடையில் உள்ள நயத்தைச் சபையோர் நன்கு அனுபவிக்கும் வண்ணம் எடுத்துக் கூறினார். ரசிகமணியின் தொடர்பினால் கல்கியின் இலக்கியம் தமிழ்ப் பண்போடு கூடி மிளிர்ந்ததை, ரசிகமணியின் முத்திரையோடு கூடிய வாசகங்களை அப்படி அப்படியேஎடுத்தாண்டு கொண்ட கல்கியின் நயத்தை மிக நயமாகக் காட்டினார். கல்கி தம்முடைய கதா பாத்திரங்களுடன் ஒன்றி நிற்கும் உள்ள உணர்வையும் அற்புதமாக எடுத்துக் காட்டிப் பேசினார்.

தமிழ் மொழியின் அழகு, அதில் மண்டிக் கிடக்கும் அதிசயமான பாவ உணர்ச்சிகள் எல்லாம் திரு மகராஜனிடம் பொங்கிப் பெருகி விளையாடியதைச் சபையோர் வெகுவாக ரசித்து மகிழ்ந்தனர். கடைசியாக ஒரு விஷயத்தைக் கூறி முடித்தார்.

"கல்கி ஆரம்பித்த 'கல்கி'ப் பத்திரிகையின் ஆசிரியராக இப்பொழுது தொடர்ந்து பணியாற்றுபவர் ரசிகமணியின் மடியிலே வளர்ந்து தவழ்ந்து, ராஜாஜியின் அடிச்சுவட்டைப் பின்பற்றும் திரு சோமு அவர்கள். பேராசிரியர் கல்கியைப் போலவே தமிழுக்குத் தொண்டாற்றும் ஆற்றல் படைத்தவர். திரு சோமு ஒரு சிறந்த கவிஞர். அவரை ஆசிரியராகப் பெற்ற 'கல்கி'ப் பத்திரிகை கல்கி அவர்களின் இலட்சியங்களை மேலும் மேலும் வளர்த்து வரவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்.

ராஜாஜி அவர்கள் தம்முடைய முடிவுரையில் தமக்கே உரிய நகைச்சுவையும், இடக்கரடக்கலும் நிறைந்த அழகோடு உவமைகளுடன் பேசினார். எழுதும் எழுத்தில் எளிமையும், தெளிவும் இருப்பதற்குத் தெளிவான கருத்துக்கள் அவசியம் என்று வற்புறுத்தினார், புகழ்பெற்ற கோகலே மன்றத்தில் உள்ள மிகப் பெரிய தேசியத் தலைவர்களின் திருவுருவப்படங்களின் வரிசையில் கல்கியின் திருஉருவப்படமும் சேர்வதில் தம்முடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்.

கோகலே மன்றத்தில் பேராசிரியர் கல்கியின் திருவுருவப் படத்தைத் திறந்துவைக்கும் திருப்பணியில் பெரு முயற்சி செய்த அன்பர்களைப் பாராட்டுகிறோம். கோகலே மன்றத்தில் திறந்து வைத்திருக்கும் பேராசிரியர் கல்கியின் திருவுருவப்படம் அவருக்கு ஒரு ஞாபகார்த்தமாக விளங்குவதோடு, தமிழ்ப் பணியைத் தமிழ் மக்கள் மறக்க மாட்டார்கள் என்பதற்கும் அறிகுறியாக இருக்கும்.

பேராசிரியர் கல்கியின் திருவுருவப் படத்தைத் திறந்து வைத்து உணர்ச்சியோடு திரு எஸ். மகராஜன் பேசுகிறார். அருகில் ராஜாஜி அமர்ந்திருக்கிறார்.



# நெய்வேலியில் கருப்புத் தங்கம்

## 4. நிலக்கரி கண்ட விவசாயி

பதினொரு ஆண்டுகளுக்கு முன்னால் தென்னார்க்காடு மாவட்டத்தில் ஓர் அற்புதம் நிகழ்ந்தது. தென்னார்க்காடு மாவட்டம் கடலூர் தாலுகா, குறிஞ்சிப்பாடியைச் சேர்ந்த நெய்வேலி கிராமத்தில் ஒரு விவசாயி தம்முடைய தோட்டத்தில் கிணறு தோண்டினார். யார் இந்த விவசாயி! ஜம்புலிங்க முதலியார் என்னும் பெயர் கொண்ட ஊக்கமும் உழைப்பும் நிறைந்த, தமிழ் நாட்டின் பண்பு மிக்க மத்தியதர விவசாயிதான். ஜம்புலிங்க முதலியார் தாம் மிகவும் கஷ்டப்பட்டுத் தோண்டும் கிணற்றுக்குள்ளிருந்து தண்ணீர் கிடைக்கப் போகிறது என்று எதிர்பார்த்தார். அவர் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. தண்ணீர் மட்டும் கிடைக்கவில்லை, தமிழ் நாட்டின் எதிர்காலத்தையே மாற்றி அமைக்கும் விந்தைப் பொருள் அல்லவா கிடைப்பதற்கு வேண்டிய அறிகுறிகள் தென்பட்டன. தண்ணீரில் கந்தக நாற்றம் வீசியது. பெட்ரோல் மணம் கமழ்ந்தது. விதம் விதமான மண்கள் கிடைத்தன. அந்த மண்களுடன் சிறு சிறு கரித் துண்டுகளும் அகப்பட்டன. இந்த விசித்திரங்களையெல்லாம் பார்த்த திரு ஜம்புலிங்க முதலியார் திகைத்துப் போனார். அவர் கண்டாரா, மிகப் பெரிய அதிசயப் பொருளைக் கண்டு பிடித்து விட்டோம் என்று! தம்முடைய கிணற்றில் கிடைத்த விசித்திரப் பொருள்கள் விஷயமாக அதிகாரிகளுக்குத் தெரிவித்தார். அதிகாரிகள் இதைச் சென்னை சர்க்காருக்குத் தெரிவித்தனர். சென்னை சர்க்கார் இந்திய சர்க்கார் பூகர்ப்ப ஆராய்ச்சியாளர்களுக்கு விஷயத்தை அறிவித்து ஆராய்ச்சி செய்யத் தூண்டினர்.

பூகர்ப்ப ஆராய்ச்சியாளர்கள் நெய்வேலிக்கு வந்தனர். நெய்வேலியில் ஜம்புலிங்க முதலியாரின் கிணற்றைப் பரிசோதித்தனர். அதிசயப்பட்டுப் போய் விட்டனர். ஆகா! நிலக்கரி அல்லவா இருக்கிறது. கருப்புத் தங்கம் அல்லவா கிடைக்கும் போலிருக்கிறது என்று வியந்து போனார்கள். உடனே தங்கள் ஆராய்ச்சியில் ஈடுபட ஆரம்பித்தனர். 1945 ல் இருந்து 1952 வரை ஏழு ஆண்டுகள் இடைவிடாமல் ஆராய்ச்சிகள் நடைபெற்றன. நெய்வேலியில் பல இடங்களில் பூமியைக் குடைய ஆரம்பித்தனர். பத்தடி இருபது அடி ஆழமா குடைந்தார்கள்! இல்லை; முந்நூறு அடி, முந்நூற்று ஐம்பது அடி என்று பூமியைக் குடைந்தார்கள். முந்நூற்று ஐம்பது அடி ஆழத்துக்கு இரும்புக் குழாய்களைப் பூமிக்குள் இறக்கினார்கள். முந்நூறு அடிக்குக் கீழே இருக்கும் நிலக்கரியைத் தொடும் வரையிலும் அதற்குக் கீழேயும் என்னென்ன விதமான மண் வகைகள் இருக்கின்றன என்று ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தனர். இவ்வாறு ஒரு இடத்தில் இரண்டு இடத்திலா ஆராய்ச்சி செய்தனர்! சுமார் முந்நூறுக்கு மேற்பட்ட இடங்களில் பூமியைக் குடைந்து குடைந்து ஆராய்ந்தனர். முந்நூறு அடி ஆழத்துக்கு இரும்புக் குழாய்களை இறக்கி ஆராய்ச்சி செய்தனர்.

பூமிக்கு அடியில் முந்நூறு அடி ஆழத்துக்குக் குழாய்கள் இறக்குவது என்றால் சாதாரண விஷயமா! அதிலும் முந்நூறுக்கு மேற்பட்ட இடத்தில் குழாய்கள் இறக்கினார்களென்றால் எப்பேர்ப்பட்ட சாதனை என்பதைக் கற்பனை செய்து பாருங்கள். பூமியைக் குடைந்து அதிலிருந்து மண்ணை எடுப்பதற்கு வேண்டிய இயந்திரங்கள் எல்லாம் மேல்நாட்டிலிருந்துதான் வர வேண்டும். அப்பொழுது யுத்த காலமானதால் குழாய்கள் இறக்குவதற்கு வேண்டிய நவீன வசதி படைத்த யந்திரங்கள் அவர்களுக்குக் கிடைக்கவில்லை. ஆனாலும் பூகர்ப்ப ஆராய்ச்சியாளர்கள் முயற்சியை நிறுத்தவில்லை. நம்முடைய நாட்டிலேயே பூமியைக் குடைவதற்கு வேண்டிய அலகுகளைத் தயாரித்து எப்படியோ நூற்றுக்கணக்கான குழிகளை இறக்கிப் பலவிதமான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டுப் பல உண்மைகளைக் கண்டு பிடித்தனர். முந்நூறு அடிக்குக் கீழே விந்தைப் பொருளான நிலக்கரி இருப்பதைத் தெரிந்து சர்க்காருக்கு அறிவித்தனர்.

பின்னர் நிலக்கரி எவ்வளவு இருக்கிறது என்று ஆராய்ந்தனர். நெய்வேலியில் எவ்வளவு சதுர மைல்களுக்குப் படர்ந்து கிடக்கிறது என்பதைக் கண்டு பிடித்தனர். நெய்வேலியில் நூறு சதுர மைல் விஸ்தீரணத்துக்கு நிலக்கரி கிடைக்கிறது. அது எட்டு அடி கனத்திலிருந்து எண்பது அடி கனம் வரையில் பரந்து கிடக்கிறது என்பதையும் ஆராய்ந்து கண்டு பிடித்தனர். இந்த உண்மையைக் கண்டு பிடிப்பதற்காக பூகர்ப்ப ஆராய்ச்சியாளர்களுக்கு ஊக்கம் அளித்த சென்னை சர்க்காரை எவ்வளவு புகழ்ந்து பாராட்டினாலும் தகும்.

"என்ன! சென்னை சர்க்காரைப் பாராட்டுவதா! இந்தக் காரியத்துக்கு எட்டு ஆண்டுகளுக்கு மேல் காலம் கடத்திய சென்னை சர்க்காரைப் பாராட்டுவதா!"

ஆமாம். எட்டு ஆண்டுகளுக்குள் இந்த அற்புதமான சாதனையைச் செய்திருக்கிறார்களே என்று பாராட்டத்தான் வேண்டும். சாதா

பூமியைக் குடையும் பயங்கர அலகுகள்



ரணமாக ஒரு ஆற்றுக்குப் பாலம் போடுவதா யிருந்தாலே அதற்குப் 'பிளான்' வரைந்து செலவு மதிப்புத் தயாரித்து வேலை தொடங்குவதற்கே பல ஆண்டுகள் ஆகி வருவதைக் கண் முன்னால் பார்த்து வருகிறோம். அப்படி இருக்க நிலக்கரி எடுக்கும் துறையே நமக்குப் புதிது. அதிலும் நெய்வேலியில் நிலக்கரி இருக்கிறது என்றால் பலர் ஆச்சரியப்பட்டே போனார்கள். அதிலும் எத்தனையோ அடி ஆழத்துக்குக் கீழ எவ்வளவோ அபாயமான சக்தி நிறைந்த தண்ணீருக்கு மேலே இருக்கும் நிலக்கரியைக் கண்டு பிடித்து அதை எடுப்பதற்கு வேண்டிய திட்டத்தையும் ஏழு எட்டு ஆண்டுகளுக்குள்ளாகவேசெய்து விட்டார்கள் என்றால் அது எவ்வளவோ பாராட்டுதற்குரிய விஷயம் என்று நிலக்கரிச்சுரங்கத் துறையில் ஈடுபட்டு உழைத்து வரும் நிபுணர்கள் கூறுகிறார்கள். ஆம்! அவர்கள் கூறுவது உண்மைதான் என்பதை நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்துக்கு நேரில் போய்ப் பார்த்த போது மிக நன்றாகத் தெரிந்து கொள்ள முடிந்தது.



பகீரதன்

## 5. பொங்கு புனலாடல்

நேயர்கள் இப்பொழுது ஒருவாறு நிலக்கரியைப் பற்றியும், அதன் அற்புத சக்தியைப் பற்றியும், நெய்வேலியில் அது எப்படி உண்டாயிற்று, அதை எடுப்பதற்கு எவ்வளவு பாடுபட வேண்டி யிருக்கிறது என்ற விஷயங்களைப் பற்றியும் புரிந்து கொண்டிருக்கலாம். வாருங்கள், நெய்வேலியில் நிலக்கரி எடுக்கும் அற்புதத்தைப் பார்ப்போம். போவதற்கு முன்பாக நெய்வேலியில் உள்ள பொங்கு புனலில் குளித்து விட்டுச் செல்வோம்.

"நெய்வேலியில் இருக்கும் பொங்கு புனல்களின் அழகை, பொங்கு புனலாடலின் இனிய சுகத்தை எப்படி வர்ணிப்பேன்;

பெப்ருவரி மாதம். காலை வேளை. பயங்கரப் பனி பெய்து கொண்டிருந்தது. பத்திரிகை







1. பூமியைக் குடையும் ராட்சஸ யந்திரங்கள் 2. பூமியைக் குடையும் சக்கர அறைகள். 3. பொங்கு புனல் 4. ராட்சஸக் குழாய்கள். 5. யந்திர சாதனங்களை, மந்திரியும் பத்திரிகையாளர்களும் பார்க்கிறார்கள்.



பொங்கு புனலின் அழகைப் பார்த்து ஜவாஹர்லால் நேரு மயங்கி நிற்பதைப் பாருங்கள்.

யாளர்கள் பலர் பனியைப் பார்த்துப் பயந்து விட்டனர். 'வெந்நீரில்தான் குளிப்போம்'என்று பலர் வெந்நீரில் குளிக்கவும் செய்தனர். நெய்வேலிக்குச் சென்று பொங்கு புனலாடாமல் வெந்நீரில் குளித்தவர்களை நினைந்து ஒரு தரம் அவர்களுக்காக இரக்கப் படாமல் இருக்க முடியவில்லை. ஆனாலும் நடுங்கும் குளிரையும் லட்சியம் செய்யாமல் பொங்கு புனலாடச் சென்ற பத்திரிகையாளர்களுடன் செல்வோம்.

இதோ பொங்கு புனலுக்கு வந்து விட்டோம். பூமிக்கு அடியில் குழாய்களை இறக்கி இருக்கிறார்கள். அந்தக் குழாய் பூமி மட்டத்துக்கு மேலே ஒரு ஆள் உயரத்துக்கு நிற்கிறது. ஒரு அடி அகலம் உள்ள அந்தக் குழாயிலிருந்து தண்ணீர் பொங்கி வழிந்து பொங்கு புனலாகக் காட்சி அளிக்கிறது. இந்தக் குழாயைச் சுற்றி வட்டமாகத் தொட்டி போல் சுவர் எழுப்பியிருக்கிறது. இதுபோன்ற அதிசயப் பொங்கு புனல்கள் நெய்வேலியில் சுமார் நூறுக்கு மேல் இருப்பதாக அறிந்தோம்.

அடாடா! அந்தப் பொங்கு புனலின் அழகை எப்படிச் சொல்வேன்! குபு குபு என்று தண்ணீர் பொங்கி வரும் அழகைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். அந்தத் தண்ணீர் ஒரு சமயம் ஒளி வீசித் திகழும் வைரங்களாகவும், ஒரு சமயம் பள பள வென்று மின்னும் புஷ்பராகங்களாகவும் ஜகஜ்ஜோதியாக மின்னிய காட்சியைச் சொல்வதா! அருவிபோலச் சலசல என்று ஓசை நயத்துடன் விழுந்து ஓடும் அற்புதத்தை வர்ணிப்பதா! சர்வேசுவரன் தலையிலிருந்து பொங்கி வரும் கங்கைபோலக் காட்சி தரும் கோலத்தைக் கூறுவதா! எதைச் சொல்வது, எப்படி விளக்குவது என்று தெரியாமல் திகைக்கிறேன். தமிழ் நாட்டில் இதோ நமக்கு அருகில் உள்ள நெய்வேலியில் இருக்கும் இந்த அற்புதப் பொங்கு புனலை இத்தனை நாள் பார்த்து மகிழாமல் போனேமே என்று ஏக்கம்தான் ஏற்பட்டது.

பொங்கு புனலுக்கு அருகில் சென்றதும் குளிர் பறந்து சென்று விட்டது. காலை வேளையில் பொங்கு புனல் நீர் பத்திரிகை யாளர்கள் எதிர்பார்த்தபடி 'ஜில்' லென்று இருக்கவில்லை. வெது வெதுப்பாகத்தான் இருந்தது. இதைப் பார்த்தவுடனேயே குளிர் அங்கு இருக்குமா என்ன! நம்மைக் கேட்காமலேயே நம்மை விட்டுச் சென்று விட்டது. காதலனைக் கண்ட காதலியைப் போல ஒரு கணம் பொங்கு புனலைப் பார்த்து மயங்கி நின்றோம். அடுத்த கணம் பொங்குபுனலின் அழகில், அதன் அதிசயமான வேகத்தில் மனத்தைப் பறி கொடுத்தோம். பிறகு பொங்கு புனலாட ஆரம்பித்து விட்டோம்.

காலை வேளையில் பொங்குபுனலாடி விட்டு வந்த போது உடலில் இருந்த கலகலப்பை, மனத்தில் ஏற்பட்ட நிம்மதியை எப்படிச் சொல்லுவேன்! பிரசித்தி பெற்ற சென்னை சர்க்கார் பஸ்ஸில் சென்னையிலிருந்து நெய்வேலி வரை நூறு மைல் பிரயாணம் செய்த அலுப்பும், உடல் வலியும் இருக்கும் இடம் தெரியாமல் பறந்து விட்டன. அபூர்வமான பொங்கு புனலை விட்டுப் பிரியவே மனமில்லாமல் நாங்கள் பிரிந்து வந்தோம்.

பொங்கு புனல் தண்ணீரில் கந்தகச் சக்தி கலந்து இருப்பதாகவும், இதில் குளித்தால் உடலுக்கு நல்லது என்றும் சொன்னார்கள். தொடர்ச்சியாகப் பொங்கு புனலில் பல நாள் குளித்து வந்தால் பல வியாதிகள் தீருகின்றன என்று அதில் விடாமல் குளித்துப் பயன் அடைந்த அனுபவசாலிகள் பலர் கூறுகின்றனர். தண்ணீரில் குளித்து வியாதி நீங்குவதென்றால், காலணாக் காசுகூடச் செலவில்லாமல் வியாதிகள் நீங்கிப்போவது என்றால் டாக்டர்கள் ஒத்துக்கொள்வார்களா! ஆனால் நாட்டு நலத்தில் அக்கறையுள்ள டாக்டர்கள் இதைப்பற்றிச் சிந்திக்கலாம்.

உடலுக்கு மட்டும்தானா இந்தத் தண்ணீர் நல்ல பலன் அளிக்கிறது! விவசாயத்துக்கும் நல்ல முறையில் பயன் அளிக்கிறது. கேழ்வரகு, புகையிலை முதலிய பயிர்கள் நன்றாகச் செழித்து வளருகின்றன வென்றும், பொதுவாக வேறு இடங்களில் அந்தப் பயிர்களுக்கு ஏற்படும் நோய் நெய்வேலியில் ஏற்படுவதில்லை என்றும் விவசாயிகள் சொன்னார்கள்.

# காஸ்ட்ரால் வெற்றிகள்



## உலகத்தைச் சுற்றிலும்

மார்ச் 1956
ஆர். ஏ. ஸி. சர்வதேசப் பந்தயத்தில்
பூரண வெற்றி பெற்றது

*வெற்றி பெற்றவர்:* எல். ஓ. சிம்ஸ், ஆஸ்டன் மார்ட்டின்
*லேடீஸ் கப்:* ஏஞ்ஜலா பால்ப்ரே, ஆஸ்டின்
ஆஸ்டின்களின் டீம் வெகுமதி

பிப்ரவரி 1956
ஸெஸ்டிரியஸ் பந்தயத்தில்
பூரண வெற்றி பெற்றது
மெஸர்ஸ் ஸ்காக் & மால் - மர்ஸிடெஸ்

வெற்றி பெற்றவர்கள்
**காஸ்ட்ராலையே**
உபயோகித்தனர்




*எண்ணெய்களில் மிகச் சிறந்தது*

**ஸி. ஸி. வேக்பீல்ட் & கம்பெனி, லிமிடெட்**
இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது

L. 10

ருசி இல்லை வாசனை இல்லை முற்றிலும் சுத்தமானது




சுவஸ்திக் மெடிஸனல் காஸ்டர் ஆயில் சுகாதார முறைப்படி தயாரிக்கப்பட்டிருக்கிறது. எப்பேர்ப்பட்ட வயிற்றுக் கோளாறுகளுக்கும் நிச்சயமான நிவர்த்தி அளிக்கும் மருந்தாகக் கருதி டாக்டர்கள் இதை சிபாரிசு செய்கிறார்கள்.

உங்கள் மருந்து வியாபாரியிடம் விசாரியுங்கள்

## சுவஸ்திக் மெடிஸனல் காஸ்டர் ஆயில்

ஸ்ரீ சுவஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்

SHILPI SOM 330 TAM. A

---



## வளரும் குழந்தைகளின்

போஷிப்பிற்கு இன்றியமையாதது

குழந்தைகளின் உடலைப் பராமரித்து வளர்ப்பதில் சரி இணையற்ற ஏஜண்டாக விளங்குகிறது விடோபெரின். உடலில் ரத்தமின்மை, வைடமின்கள் குறைவு மற்றும் உடலுக்குப் பலவீனத்தை பயக்கும் கோளாறுகள் பலவற்றையும் போக்க இது சிறந்த டானிக்காக விளங்குகிறது.




# விடோபெரின்

தயாரிப்பாளர் :

ஸ்ரீ மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேட்டரி லிமிடெட், மல்லேஸ்வரம், பெங்களூர்

ஸேல்ஸ் டிப்போ : 35/37, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

பொங்கு புனலாடி விட்டுத் திரும்பி வந்ததும் நெய்வேலிச் சுரங்க அதிகாரி "உம் புறப்படுங்கள், நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்தைப் பார்த்து வருவோம்" என்றார்.

முதல் நாள் நீண்ட நெடுந் தூரம் பிரயாணம் செய்திருந்ததாலும், அதிகாலையில் பொங்கு புனலாடியதாலும் பத்திரிகையாளர்கள் எல்லாருக்கும் வழக்கத்தைவிட அதிகமாக, சற்று முன்னதாகவே பசிக்க ஆரம்பித்து விட்டது. ஆகையால் "நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்தைப் பார்ப்பதற்கு முன்னால் கொஞ்சம் வயிற்றுப் பாட்டைப் பார்ப்போம்" என்று ஒரு பத்திரிகையாளர் கூறியதும் நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத் திறந்தவெளியில் 'கொல்' லென்ற சிரிப்பொலி பரவி ஒலித்தது.

## 6. நிலக்கரித் திடல்

பத்திரிகையாளர்களை ஏற்றிக் கொண்டு பஸ் நிலக்கரித்திடலுக்குச் சென்றது. திடலை நெருங்குவதற்குள்ளாகவே உயரம் உயரமான பல யந்திரங்கள் நம்மை வரவேற்றன. இவைகள் எல்லாம் நானூறு அடி ஆழம் பூமியைக் குடைவதற்கு உபயோகப்படுத்தும் யந்திர சாதனங்கள் என்று அறிந்தோம். அந்த உயரமான யந்திரங்களுக்கு அடியில் பலப்பல யந்திர சாதன உறுப்புக்கள் வரிசை வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. பதினெட்டு அங்குலம், இருபது அங்குலம் அகலமுள்ள பெரிய பெரிய இரும்புக் குழாய்கள் பரப்பி வைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றும் பத்தடி நீளம் உள்ளவை. இன்னொரு இடத்தில் தென்னைமரம் அளவு கனத்தில் மூன்று நான்கு பெரிய பல் சக்கரங்கள் பொருத்தப்பட்ட யந்திரச் சாமான்கள் இருந்தன. இவைகள் சிறிய அளவில் இருந்து பெரிய அளவு வரையில் பலவேறு கனத்தில் காட்சி அளித்தன. இவைகள் எல்லாம் மண்ணைக் குடையும் அலகுகள். மேல் நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட யந்திர சாதனங்கள்.

"இந்த ' இயந்திர சாதனங்கள் எல்லாம் எத்தனை ரூபாய்கள் மதிப்புள்ளவை!"

"ஒவ்வொன்றும் லட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள அபூர்வமான யந்திரங்கள்."

"இந்த யந்திர சாதனங்களை நம் நாட்டிலேயே தயாரிக்க முடியாதோ!"

"நெய்வேலியில் நிலக்கரி எடுத்தால், சேலத்திலுள்ள இரும்பைக்கொண்டு இவைபோன்ற சாமான்களைத் தயாரிக்கலாம். இவைபோன்ற சாமான்கள் மட்டுமா! இன்னும் எத்தனை எத்தனையோ நவ நவமான யந்திரச் சாமான்களையெல்லாம் தயாரிக்கலாம். தமிழ் நாட்டையே தொழில் வளம் உள்ள பூமியாக மாற்றலாம்."

இந்த விவரங்களைச் சொல்லிக் கொண்டு வந்த அதிகாரி, சற்றுப் பரபரப்போடு "இதோ இன்னும் சற்று நேரத்துக் கெல்லாம் வருகிறேன்" என்று விடைபெற்றுச் சென்றார்.

இந்த அதிகாரி எங்கே அப்படிச் செல்கிறார் என்று அவர் சென்ற திசையைப் பார்த்தோம். மூவர்ணக்கொடி பறக்க மந்திரியின் கார் புழுதியைக் கிளப்பிக்கொண்டு வந்து நின்றது.

மந்திரி கனம் பக்தவத்சலத்துடன் மீண்டும் எல்லா யந்திரங்களையும் சுற்றிப் பார்த்தோம்.



இப்பொழுது இயந்திரச் சாமான்களுக்கு அருகில் பல தொழிலாளர்கள் அணிவகுத்து நின்று மந்திரியையும் பத்திரிகையாளர்களையும் வரவேற்றனர். நீளமான நீலநிறக் கால்சட்டையும், வெள்ளை ஷர்ட்டையும் அணிந்திருந்த அந்தத் தொழிலாளர்கள் நிலக்கரித் திடலில் அணிவகுத்து நின்று வரவேற்ற காட்சி அற்புதக் காட்சியாக இருந்தது. அவர்கள் தானே கருப்புத் தங்கத்தை எடுக்கும் தொழிலாளர்கள்; இந்த நாட்டின் செல்வங்கள்.

மணி சரியாக ஒன்பது அடித்து முப்பது நிமிஷங்கள் ஆனவுடன் மந்திரி பக்தவத்சலம் நிலக்கரிக்கு அடியில் உள்ள தண்ணீரின் சக்தியைக் குறைப்பதற்காகப் பொருத்தப்பட்டிருந்த குழாய்களை இயக்க ஆரம்பித்தார். அங்கு ஒரு பலகையில் இருந்த பச்சைப் பொத்தானைத் தமது வலது கையினால் மெதுவாக அமுக்கினார். அடுத்த கணம் 'பூம் பூம் பூம் பூம்' என்று வெற்றிச் சங்கம் ஊத ஆரம்பித்தது. பதினாறு குழாய்களையும் ஒவ்வொன்றாகத் திறக்க ஆரம்பித்தார்கள். 'புஸ், புஸ், புஸ்' என்று பயங்கரமாக அலறி விட்டுக் 'குபீர்' என்று ஒவ்வொரு குழாயிலிருந்தும் தண்ணீர் பீறிக் கொண்டு வந்து விழ ஆரம்பித்தது. நிமிஷத்துக்கு ஆயிரம் காலன் தண்ணீர் வீதம் ஒவ்வொரு குழாயிலிருந்தும் வந்து விழுந்த தண்ணீர் சிறு சிறு வாய்க்காலாக ஓடி மத்தியில் இருந்த பெரிய வாய்க்காலில் கலந்து வெள்ளமாக ஓட ஆரம்பித்தது!

சில நிமிஷங்களுக்கு முன்னால் வெறும் மணலாக இருந்த அந்த வாய்க்காலின் இரு கரையும்

ததும்பத் தண்ணீர் ஓடிய காட்சி ஏதோ இந்திர ஜால மகேந்திர ஜாலக் காட்சி போல இருந்தது. ஒரு வரிசைக்குப் பத்துக் குழாய்கள் வீதம் இரண்டு வரிசைகள் இருக்கின்றன. ஒரு குழாய்க்கும் இன்னொரு குழாய்க்கும் நூறு அடி இடைவெளி யிருக்கிறது. ஒரு வரிசைக்கும் அதன் எதிர் வரிசைக்கும் இருநூற்று ஐம்பது அடி தூரம் இருக்கிறது. இவ்வாறு ஆயிரம் அடி தூரம் நீண்ட சதுர இடத்துக்குள் இருபது குழாய்கள் பொருத்தப் பட்டிருக்கின்றன. இந்தக் குழாய்கள் எல்லாம் பூமிக்கு அடியில் நானூறு அடி ஆழம் செலுத்தப் பட்டவை. இப்பொழுது பதினாறு குழாய்கள் தான் தண்ணீர் இறைக்க ஆரம்பித்தன. விரைவில் அடுத்த நாலு குழாய்களும் வேலை செய்ய ஆரம்பித்து விடும் என்று கூறினார்கள்.

இந்தத் தண்ணீர் இறைப்பு வேலை நூறு நாட்கள் தொடர்ந்து நடைபெறும் என்று தெரிவித்தனர்.

இதற்கு மத்தியில் ஐந்து நிமிஷத்துக்கு ஒரு முறை சங்கு முழங்கிக் கொண்டே இருந்தது!

"ஏன் இப்படிச் சங்கு ஊதுகிறது!" என்றார் ஒரு பத்திரிகையாளர்.

"இந்தக் குழாய்கள் தண்ணீர் இறைக்க ஆரம்பித்தவுடன் பூமிக்கு அடியில் உள்ள தண்ணீரின் சக்தி குறைகிறதா இல்லையா! அது எப்படிக் குறைகிறது என்பதைக் கண்டு பிடிப்பதற்காக இங்கிருந்து சில மைல்கள் சுற்றளவுக்குள் எண்ணற்ற சோதனைக் குழிகள் இறக்கி வைத்திருக்கிறோம். ஒவ்வொரு குழிக்கு அருகிலும் ஒரு ஆள் இருப்பார். ஐந்து நிமிஷத்துக்கு ஒருமுறை சங்கு ஊதும் போதும் அவர் அந்தக் குழியில் அளவு நாடாவை விட்டுத் தண்ணீர் மட்டம் குறைவதைக் குறித்து வைப்பார். ஒவ்வொரு ஐந்து நிமிஷமும் விடாமல் குறித்து வைப்பதன் மூலம் பூமிக்கு அடியில் தண்ணீரின் சக்தி எப்படிக் குறைகிறது என்பதைத் தெரிந்து கொண்டு அதற்கேற்ப நம்முடைய சோதனைகளைப் பெருக்க முடியும்" என்றார்.

"இந்தக் காரியத்துக் கெல்லாம் யந்திரங்கள் உதவி கிடையாதோ!"

"ஓ! இருக்கிறதே! இதோ தண்ணீர் இறைக்கும் குழாய்க்கு அருகில் அதுபோன்ற யந்திரம் இருக்கிறது. இது இரவு பகல் இருபத்து நாலு மணி நேரமும் தண்ணீரின் சக்தி குறைவதைக் குறித்து வைக்கும். ஆனால் இது போன்ற யந்திரங்களை எல்லா இடங்களிலும் பொருத்தி வைக்க முடியாது. அதனால்தான் ஆங்காங்கு ஆட்களையே நியமித்திருக்கிறோம்" என்று கூறினார் அதிகாரி.

அதிகாரிகளிடம் இந்த விவரங்களை யெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டே தூரத்தில் ஜனக்கூட்டம் நிறைந்து நின்ற இடத்துக்குச் சென்றோம். மண்ணைப் பொன்னாக்கும் உழைப்பாளி மக்கள் தங்கள் குடும்பத்துடன் வந்து நின்று இந்தத் தண்ணீர் இறைக்கும் காட்சியைப் பார்த்து அதிசயித்து நின்றனர்.

## 7. பாம்புகள் ஜாக்கிரதை!

இந்தக் கிராமத்து மக்களைப் பார்ப்பதற்குச் செல்லும்போது வழியில் சிறு பலகைகளில் கொட்டை எழுத்தில் "பாம்புகள் ஜாக்கிரதை!" என்று எழுதி யிருந்ததைப் பார்த்துத் திடுக்கிட்டோம். அந்தப் பலகையில் "இரவு நேரத்தில் வேலை பார்க்கும் தொழிலாளர்களே! கண்களை அகல விரித்துக் கொண்டு வேலை செய்யுங்கள். பாம்புகள் அதிகம்!" என்று ஆங்கிலத்தில் எழுதியிருந்தது.

நிலக்கரி தன்மீது மூந்நூறு அடி மண்ணையும் தனக்கு அடியில் பயங்கரச் சக்தி கொண்ட தண்ணீரையும் வைத்துக் கொண்டிருப்பதுடன் நூற்றுக்கணக்கான விஷப் பாம்புகளையும் அல்லவா வைத்துக் கொண்டிருக்கிறது. இந்தப் பாம்புகள் மண்ணுக்குள் மறைந்து கிடக்குமாம். கண்ணுக்கே தெரியாதாம். சட்டென்று காலைக் கவ்விப் பிடித்துக் கடித்து விடுமாம். ஏராளமான இரத்தம் கடித்த வழியாக வெளியே வந்து என்னென்னமோ நோய்கள் உண்டாகி விடுமாம். அவ்வளவு கொடிய விஷமுள்ள பாம்புகள் நிலக்கரித் திடலில் நிறைந்து கிடக்கின்றன. இப்பொழுது முன் இருந்ததுபோல் அதிகமான பாம்புகள் இல்லை என்றும் அவைகளைக் கொன்று விட்டோம் என்றும் சொன்னார்கள். இந்தச் செய்தி மனத்துக்குச் சற்று ஆறுதலா யிருந்தது.

"பாம்பென்றால் படையும் நடுங்கும்" என்பது பழமொழி. ஆனாலும் அந்தப் பாம்பையும் லட்சியம் செய்யாமல் இரவு பகல் என்று உழைத்து வரும் பாட்டாளி மக்களின் நெஞ்சுறுதியைப் போற்றிப் பாராட்டத்தான் வேண்டும். உண்மையான தேசபக்தி என்றால் இப்படி அல்லவா இருக்க வேண்டும்!

கிராமத்து மக்களை நெருங்கி அவர்களிடம் நிலக்கரியைப் பற்றிக் கேட்டோம். பாவம்! ஏழை மக்கள் அதன் அருமையைத் தெரிந்து



திருவாய்மொழி என்னும் அற்புத நூலுக்குத் திருத்தமான பதிப்பு இல்லை என்ற குறை இவ்வருஷப் புத்தாண்டு தினத்தன்று நீங்கியது. காலஞ் சென்ற வையாபுரிப்பிள்ளை பல பிரதிகளைச் சோதித்துத் தயாரித்த திருவாய்மொழியை மர்ரே கம்பெனி திரு ராஜம் அவர்கள் வெகு அழகிய முறையிலும் யாரும் விலை கொடுத்து வாங்கும் வகையில் மலிவாகவும் பிரசுரித்திருக்கிறார். தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் சென்னை, மயிலாப்பூர், ரஸிக ரஞ்சனி சபை மண்டபத்தில் இந்தத் திருவாய்மொழி வெளியீட்டு வைபவம் தமிழ்ப் புத்தாண்டு தினத்தில் வெகு சிறப்பாக நடைபெற்றது. இவ் வைபவத்துக்கு ராஜாஜி அவர்கள் தலைமை வகித்து அழகான வாழ்த்துரை தந்தார்கள். ஸர் எஸ். வரதாச்சாரியார் அவர்கள் திருவாய்மொழியின் சிறப்பைப் பற்றிப் பேசிவிட்டு, நூலை வழங்கினார். பொது மக்கள் சார்பில் ராஜாஜி அதை ஏற்றுக் கொண்ட காட்சியை மேலே படத்தில் காணலாம். திருவாளர்கள் பெ. நா. அப்புஸ்வாமி, எஸ். வரதாச்சாரியார், காரப்பங்காடு வேங்கடாச்சாரியார், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், புருஷோத்தம நாயுடு, ம. பொ. சி. முதலியவர்கள் திருவாய்மொழியைப் பற்றியும், இப் பதிப்பின் சிறப்பைப் பற்றியும் பேசினார்கள்.

கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக ஏதோ தங்கள் நிலங்கள் வீணாகி விட்டவை போலச் சொன்னார்கள். அவர்கள் உற்சாகமில்லாமல் சொன்ன விஷயம் இதுதான்.

தண்ணீர் இறைக்கும் வேலை நடக்கும் இடம் சில ஆண்டுகளுக்கு முன்பு நல்ல கிராமமாக இருந்தது. இந்தக் கிராமத்துக்குக் குறவன் குப்பம் என்று பெயர். இந்த இடங்களில் விளைந்த பயிர்களுக்கு நஷ்ட ஈடு கொடுத்து விட்டு நிலத்தைச் சர்க்கார் எடுத்துக் கொண்டது. நிலமிழந்த விவசாயிகளுக்கு வேறு இடத்தில் நிலமும் நல்ல வசதிகளும் பின்னர் சர்க்கார் செய்து கொடுக்கப் போகிறார்கள். பவானி சாகரம் முதலிய இடங்களில் சர்க்கார் எடுத்துக் கொண்ட கிராமங்களுக்கு எப்படி நஷ்ட ஈடு கொடுத்தார்களோ, அதே போல இங்கும் கொடுக்கப் போகிறார்கள்.

## 8. வெற்றி தந்த கிணறு

அங்கிருந்து காரில் ஏறிக் கொண்டு சுமார் ஒரு மைல் தூரத்துக்கு அப்பால் உள்ள கிணற்றுக்கு அழைத்துச் சென்றார்கள். இது சோதனைக் கிணறு. அதாவது நிலக்கரி எடுப்பதற்காகத் தோண்டப்பட்ட கிணறு. இது போல் மூன்று கிணறுகள் தோண்டினார்கள். முதல் கிணறு தொண்ணூறு அடி ஆழமும், இரண்டாவது கிணறு நூற்று எண்பது அடி ஆழமும் தோண்டப்பட்டன. நெய்வேலி ரயிலடிக்கு அருகில் முப்பது அடி குறுக்களவில் வெட்டப்பட்ட கிணற்றில் தண்ணீர் பொங்கி வழிய ஆரம்பித்து விட்டது. அதைத் தடுப்பதற்கு எவ்வளவோ முயன்று பார்த்தார்கள். கிணற்றுக்கு அடியில் இருந்த சிறு ஊற்றுக் கண்ணில் நூற்றுக் கணக்கான சிமெண்ட் மூட்டைகளைப் போட்டுப் பார்த்தார்கள். மூட்டைகள் எல்லாம் கீழே பாதாளத்தில் உள்ள தண்ணீருடன் போய்ச் சேர்ந்து விட்டன. ஊற்றுக்கண்ணை அடைக்க முடியவில்லை. ஆகவே அந்தக் கிணற்றை அப்படியே விட்டுவிட்டு அருகில் உள்ள தாண்டவன் குப்பத்துக்குச் சென்றார்கள். அங்கு வேறொரு கிணறு தோண்ட ஆரம்பித்தார்கள்.

1952-ம் ஆண்டு தாண்டவன் குப்பத்தில் வெட்டிய கிணறுதான் நெய்வேலி நிலக்கரித் திட்டத்துக்கு வெற்றி தந்த கிணறு.

பத்தடி அகலம் உள்ள இந்தக் கிணற்றில் நூற்று ஐம்பது அடி ஆழத்தில் தண்ணீர் இருக்கிறது. நூற்று எழுபதாவது அடியிலேயே நிலக்கரியைக் கண்டு பிடித்து எடுத்து விட்டார்கள்.

இந்தக் கிணற்றில் மட்டும் இடையூறுகள் ஏற்படவில்லையா என்று கேட்கலாம். ஏற்படத்தான் செய்தன. பல நீர் ஊற்றுகள் மூலம் தண்ணீர் பீறிடத்தான் செய்தன. அந்த ஊற்றுக் கண்களையெல்லாம் அடைத்தார்கள். எப்படி அடைத்தார்கள்! நீர் ஊற்றுக்கள் இருந்த பூமியைப் பலப்படுத்தினார்கள். அதாவது பூமிக்குள் சிமெண்ட் குழம்புகளைச் செலுத்தி மண்ணைப் பாறையாக மாற்றினார்கள். அதனால் நீர் ஊற்றுக்கள் அடைபட்டன. என்றாலும் தண்ணீர் கசிந்து கொண்டிருந்தது.

அதற்கும் ஒரு யோசனை செய்தார்கள். நூற்று அறுபதாவது அடியில் பக்கவாட்டில் ஒரு சுரங்கம் குடைந்து கசிவு நீரையெல்லாம் அங்கிருந்து சக்தி வாய்ந்த குழாய்களின் மூலம் இறைத்துப் பூமிக்கு மேலே வெளியேற்றினார்கள். இந்த ஆராய்ச்சி வீண் போகவில்லை. அவர்களுக்கு வெற்றியே தந்தது.

இந்தக் கிணற்றுக்குப் பக்கத்தில்தான் மிகப் பெரிய சுரங்கம் வெட்டி நிலக்கரி எடுத்திருக்கிறார்கள். அறுநூறு அடி நீளம் அறுநூறு அடி அகலம் இருநூறு அடி ஆழமுள்ள இந்தப் பாதாளச் சுரங்கத்திலிருந்துதான் நாற்பது டன் நிலக்கரி எடுத்து, அந்த நிலக்கரியின் தன்மைகளையெல்லாம் தெரிந்து கொள்வதற்காக மேற்கு ஜெர்மனிக்கு அனுப்பி வைத்திருக்கிறார்கள். வாருங்கள், அந்தப் பாதாளச் சுரங்கத்தில் இறங்கி நிலக்கரி எடுக்கும் அதிசயத்தைப் பார்ப்போம். (அடுத்த இதழில் முடியும்)

வெள்ளித் திரை

# சதாரம்

காந்தன்

அவ்வைப் பிராட்டியார் இப்பொழுது இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். வடிவேற்பெருமான் அவர் முன் தோன்றித் தம் மீது கவிதை பெற விரும்பிக் கேள்விகள் கேட்டிருந்தால் தமிழ் மூதாட்டி எத்தகைய பதில் அளித்திருப்பார் என்று மனோரதத்தில் ஏறி ஊகித்துப் பார்த்தேன். என் மனக் கண் முன் அவர்கள் இருவருக்கும் இடையே நிகழ்ந்த சம்பாஷணையை அப்படியே கீழே கொடுத்திருக்கிறேன்.



முருகன் :— அவ்வையே, அரியவற்றிலெல்லாம் அரியது எது !

அவ்வை :— எல்லா விதத்திலும் சிறந்த ஒரு நல்ல தமிழ்ப் படம்.

முருகன் :— பெரியது எது !

அவ்வை :— சந்தேகம் இல்லாமல், பதினெட்டாயிரம் அடிகளுக்குக் குறையாத தமிழ்ப் படங்கள்தான்.

முருகன் :— இனியது எது !

அவ்வை :— சில தமிழ்ப் படங்களில் வரும் திரைக்கதை வசனம்.

முருகன் :— கொடியது எது !

அவ்வை :— சில தமிழ்ப் படங்களில் அர்த்தமில்லாமல் புகுத்தப்படும் நடனங்கள்.

முருகன் :— பழையது எது !

அவ்வை :— நம் தமிழ்ப் படாதிபதிகள் திரைப் படத்துக்குத் தேர்ந்தெடுக்கும் கதைகள்.

கற்பனையே யானாலும் மேலே காணும் சம்பாஷணையை உண்மைக்குப் புறம்பானது என்று ஒதுக்கிவிட முடியாது.

முன்னைப் பழம் பொருளுக்கும் முன்னைப் பழம் பொருளாக விளங்குவது சதாரம்; கல் தோன்றி மண் தோன்றாக் காலத்துக்கு முன் தோன்றி மூத்த கதை சதாரம்; நம் நாட்டின் தெருக்கூத்திலிருந்து வாழையடி வாழையாக நாடக மேடைக்கும் வெள்ளித் திரைக்கும் வேகமாக வழி வழி வந்து சேர்ந்த கதை சதாரம். சமயோசித புத்தியினால் தன் கற்பைக் காத்துக் கொண்ட ஒரு வீராங்கனையின் கதை

சதாரம். வீர சாகசங்கள் நிறைந்தது. ஆயினும் அக் கதையின் பெயர் மக்களிடையே திருப்தியை விளைவிக்கவில்லை. அதன் காரணமாக அக் கதையைப் பற்றிப் பலர் தவறாகவே எண்ண இடமேற்பட்டு விட்டது.

இப்பொழுது கஸ்தூரி பிலிம்ஸார் ''சதாரம்'' கதையைத் தயாரித்திருக்கின்றனர். அவர்கள் துணிச்சலைப் பாராட்ட வேண்டியதுதான் !

தமிழ்ப் பட ரஸிகர்களின் அபிமான நட்சத்திரங்கள் இப் படத்தில் தோன்றுகின்றனர்.

கதை எல்லாருக்கும் தெரிந்த கதைதான். ஆயினும் கொஞ்சம் நினைவுப் படுத்திக் கொள்ளுவோம்.

உலகை வெறுத்து வாலிப சந்நியாசியாயிருந்த இளவரசன் சந்திரனுக்கும், உலகை மயக்கும் அழகி சதாரத்துக்கும், சந்தர்ப்பம் காரணமாகச் சந்திப்பு நேர்ந்தது. சந்திரனின் உள்ளத்தில் வளர்ந்திருந்த வைராக்கியம், சதாரத்தினிடம் வைரம் பாய்ந்த அன்பாக மாறியது. சதாரத்துக்குப் பரிசமாகச் சாம்ராஜ்யத்தையே கொடுத்துச் சந்திரனுக்கு அவளை விவாகம் செய்து வைக்கின்றனர். சதாரத்தின் சகோதரன் அழகு, அரசனாக முடி சூடினான். அவனது ஆட்சியில் குடி மக்கள் குரங்கு கைப் பூமாலையாயினர். சந்திரனும் சதாரமும் நாட்டை விட்டு வெளியேறி விடுகின்றனர். வழியில் மயோன் என்ற மகா பாவி சதாரத்தை அடையச் சூழ்வினை செய்தான். சதாரம் தன் புத்தி சாதுர்யத்தினால் அவனிடமிருந்து தப்பினாள். தப்பிச் சென்ற காதலர்களுக்கு மீண்டும் சதி வலை வீசப்பட்டது. அந்தச் சமயத்தில் அதிவீர சிங்கம் என்ற பக்காத் திருடன் ஆள் மாராட்டம் செய்து அவர்களைப் பிரித்து, சதாரத்தைக் காவலில் வைக்கிறான். கள்ளனுடைய மனைவியின் உதவியால் சதாரம் ஆணுடையில் தப்பிச் சென்று ஒரு நாட்டின் சேனாபதி யாகிறாள்.

சதாரமாக நடிக்கும் பானுமதியின் மின்வெட்டுப் பார்வைகளும், சிரிப்பும், தளுக்கும், தத்ரூபமான நடிப்போடு கலந்து படத்துக்கு உயிர் கொடுத்து விட்டன. கள்ளனிடமிருந்து தப்ப அவர் விக்கல் மேல் விக்கல்களாக விக்கிச் சாகஸம் புரிந்த காட்சி எவர் உள்ளத்திலும் இடம் பெற்றுவிடும். ஆண் உடையில் இருந்து கொண்டு சேனாபதியாக நடித்த போது அவ்வூர் இளவரசி கல்யாணியின் காதலுக்கு அவர் பாத்திரமாகி விடுகிறார். அந்தரங்கத்தில் கல்யாணியைச் சந்தித்து, கண்ணீருக்கிடையே உண்மையைக் கூறியபோது பானுமதியின் நடிப்பு இணையற்றதாயிருந்தது.

சதாரத்தைக் காதலித்த கல்யாணியின் பாகத்தை எம். என். ராஜம் ஏற்றுப் பலே ஜோராக நடித்திருக்கிறார். காதல் மயக்கில் கட்டுண்டிருந்த கல்யாணி உண்மை தெரிந்ததும் உள்ளம் பதைத்து விம்முகிறாள். எம். என். ராஜம் அப்பொழுது தத்ரூபமாக நடித்துப் படம் பார்ப்பவர்களையெல்லாம் விம்மி விதிர் விதிர்க்கச் செய்து விட்டார்.

திருடன் அதிவீர சிங்கமாக நடிக்கும் கே. ஆர். ராமசாமி தம் சொந்தக் குரலில் பாடி, அந்தமாக ஆடிப் படத்துக்கு விறுவிறுப்பையளித்து விட்டார். ஜெமினி கணேசனும் சாமியார், காதலன், கைதி, திருடன் ஆகிய பாத்திரங்களை ஏற்றுத் திறம்பட நடித்திருக்கிறார்.

வில்லன் மயோனாக நடிக்கும் பாலையா, துடை நடுங்கியாகவும், சதிகாரனாகவும் தோன்றிச் சரசரவென்று ரஸிகர்களிடையே பெயர் பெற்று விடுகிறார். நீளமான கத்திச் சண்டைக் கைவரிசைகள் இப் படத்தில் நிறைய இடம் பெற்றுத் திரைக்கதையின் நீளத்துக்கு உதவியாயிருக்கின்றன.

சதாரத்தின் தம்பி அழகு, சதாரம் நாடகத்துக்கே ஒரு ஹாஸ்யக் களஞ்சியம். அந்தப் பாத்திரத்தை ஏற்று, கே. சாரங்கபாணி அழகாக நடித்திருக்கிறார்.

குடும்ப வாழ்க்கையைச் சித்திரிக்கும் நவீன மோஸ்தர் படங்கள் அடுத்து அடுத்து வந்து விடவே, பழைய கதைகளுக்கு மீண்டும் கொஞ்சம் 'மவுசு' ஏற்பட்டு வருகிறது. சதாரத்துக்கும், மதுரை வீரனுக்கும் திரள் திரளாகச் செல்லும் ஜனக் கூட்டத்தைக்கண்டு நாம் இந்த முடிவுக்கு வரவேண்டியிருக்கிறது.






[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

**24**

அஹிம்சை என்பது பேரடங்கலான ஒரு தத்துவம். பிரபஞ்சம் ஹிம்சை என்கிற பெரிய தீயில் அகப்பட்டுக் கிடக்கிறது. அதில் சிக்கியிருக்கும் நாம் என்ன செய்ய முடியும்? உயிருக்கு உயிர் உணவாக உலகம் அமைக்கப்பட்டிருக்கிறது. ஜீவ ஹிம்சை, தெரிந்தோ தெரியாமலோ, சற்றேனும் செய்யாமல் ஒரு நிமிஷம் கூட வாழ முடியாது. சாப்பிடும் போதும் நீரருந்தும் போதும் இடம் பெயர்ந்து அசையும் பொழுதும் உயிர் கொண்ட மனிதன், பிறவுயிரை ஒவ்வொரு நிமிஷமும் துன்புறுத்தியோ கொன்றோதான் வருகிறான். கண்ணுக்குக் காணாத உயிர்களாயிருப்பினும் உயிர்கள்தானே! ஆனபடியால் அஹிம்சைப் பக்தன் அஹிம்சைக் கொள்கையை இவ்வளவுதான் செய்ய முடியும். உள்ளத்திலும் ஒவ்வொரு செயலிலும் கருணையிருக்க வேண்டும். ஆனமட்டில் எந்தச் சிறு உயிரையும் ஹிம்சை செய்யாமல் இருக்கப் பார்க்க வேண்டும். கொல்லாமல் உயிர்களைக் காப்பாற்றப் பார்க்க வேண்டும். நம்மை வளைத்துப் பற்றிக் கொண்டிருக்கும் ஹிம்சையிலிருந்து ஒவ்வொரு கணமும் இடைவிடாமல் தப்பித்துக் கொள்ள முயல வேண்டும். அவ்வளவேதான். இப்படிச் செய்தோமானால் புலனடக்கமும் இரக்கமும் வளர்ந்துகொண்டே போகும். ஆனால் ஒரு நாளும் ஹிம்சை என்கிற குற்றத்திலிருந்து முற்றிலும் தப்ப முடியாது.

[சுய சரிதம்]

தவிர, நாமென்ன செய்தபோதிலும் பிறருடைய ஹிம்சையிலும் நமக்குப் பங்குண்டு. அதிலிருந்து தப்புவதும் கஷ்டம். உயிர்கள் எல்லாம் ஒன்றே அல்லவா? ஒருவனுடைய பிழை அனைவரையும் சார்கிறது. சமூகத்தில் நடைபெறும் குற்றங்கள் எல்லாம் சமூகத்தில் உள்ள ஒவ்வொருவனையும் பொறுத்தது. இல்லாவிடில் ஒருவன் சமூகத்தில் அடங்கியவன் ஆகமாட்டான். இரண்டு மனித ஜாதிகளுக்குள் சண்டை ஆரம்பித்தால் அஹிம்சாவாதியினுடைய கடமை யுத்தத்தை நிறுத்த வேண்டியது. ஆனால் அப்படிச் செய்யச் சக்தியில்லாதவன், யுத்தத்தை எதிர்த்து நிற்கும் வலிமையற்றவன், தன்னுடைய அரசாட்சி யுத்தத்தில் புகுவதை எதிர்ப்பதற்கு வேண்டிய தகுதியைப் பெறாதவன், யுத்தத்தில் கலந்து கொண்டேதான் போக வேண்டும். ஆயினும் அதிலிருந்து தானும் தன் ஜாதியும் உலகமும் தப்புவதற்கு வேண்டிய காரியங்களை இடைவிடாமல் செய்து கொண்டே போக வேண்டும்.

[சுய சரிதம்]

# இப்போது இந்தியாவில் உங்களுக்கு கிடைக்கிறது

# பாமாலிவ்

## டால்கம் டீ-லக்ஸ்



நீங்கள் எதிர்பார்த்துக் காத்திருந்த டால்கம் பவுடர்! உண்மையிலேயே நேர்த்தியான டால்கின் சகலகுணங்களுடன், ஒரு புதியரம்மிய வாசனையும்சேர்ந்தது! வெறியூட்டும் 17 ஸென்டுகளின் அற்புதக்கலவைசேர்ந்த பாமாலிவ் டால்கம் டீ-லக்ஸின் நறுமணம் உங்களை மகிழ்வித்து புளகாங்கிதம் அடையச் செய்யும் ... மணிக் கணக்காக உங்களுக்குக் குளுமை யும் புத்துணர்ச்சியும் அளிக்கும்!



அன்னையில் சுத்தமும் சௌகர்யமும்



குழந்தைக்கு இதம் அளிக்க அதைத் தாராளமாகப் பூசுங்கள்



எரிச்சலைத்தடுக்க மேலெங்கும் அதை உபயோகியுங்கள்



சோர்ந்த பாதங்களுக்கு இதமும் புத்துணர்ச் சியும் அளிக்க




# பாமாலிவ்

## டால்கம் டீ—லக்ஸ்




அன்புள்ள அண்ணாச்சி அவர்களுக்கு,

வணக்கம். நீங்கள் சொல்லிய யோசனைதான் பலன் தந்தது என்றாலும் என்னுடைய தோற்றமும் இந்த வேலைக்குத் தகுதி என்று தெரிய முடிந்தது. இதற்காக நான் தலைக் கனம் கொள்வதாக எண்ணாதீர்கள். பெண் சிவப்பாக இருந்தால் உடனே கல்யாணம் செய்து கொள்ளப் பையன்கள் விரும்புவார்கள். அதே போல ஓட்டல் வேலைக்கு சர்வராக வருகிறவர்கள் மூக்கும் முழியுமாக வாட்டசாட்டமாக இருந்தாலும் சிவப்பாகக் கண்ணுக்குக் குளிர்ச்சியாக இருந்தாலும் உடனே இடம் கிடைக்குமென்றும் சொல்லுகிறார்கள். முதன் முதலாக நான் போட்டிருந்த கனத்த சட்டைகளை சப்ளை செய்யும்போது போடக் கூடாது என்று உத்தரவு செய்தார்கள். செய்தவர்கள் சக—தொழிலாளிகள். மெல்லிய சட்டை உடம்பின் எட்டாவது தோல் போலப் போட வேண்டும் என்றார்கள். என்னுடைய எலுமிச்சம் பழ நிறத்துக்கு இப்படிச் சட்டை போட்டால் எப்படி இருக்கும்! மன்மதன் போல என்று சொல்லலாமா!

என்னுடைய தோற்றம் முன்னைவிட அழகாக மாறிவிட்டது. துல்லியமான வெண்ணிறச் சட்டையும், பட்டுக் குங்குமமும் இட்டுக் கொண்டு வந்து விட்டால், அங்கே சாப்பிட வருகிறவர்கள் எல்லோரும் என்மீது கண்ணாக இருக்கிறார்கள்.

"இதுக்கு முன்னாலே ஒரு கரிப்பயல் இருந்தானே. அவன் போய்த் தொலைந்தானா!" என்று கேட்கிறார்கள். உலகத்தைப் பாருங்கள். பரிமாற வருகிறவர்கள் அழகாக இருக்க வேண்டும் என்று எண்ணுகிறார்கள்! அவர்கள் போடும் உணவு நன்றாக இருக்க வேண்டும் என்று யார் எண்ணுகிறார்கள்! எங்களுடைய சரக்கு மாஸ்டரை வெளியே விட்டு விட்டால், நிஜமாக மிருகக் காட்சி சாலையில் கரடியை வெளியே துரத்தி விட்டு அவரையே வைத்துக் கொள்வார்கள். பாவம், அந்த மனுஷன் ஒரு தடவைகூடப் பரிமாறும் இடம் வரக்கூடாது என்று முதலாளியின் உத்தரவு. கண்டிப்பு. அவரும் ஏன் வருகிறார்! சரக்கு மாஸ்டர் வஞ்சனையற்ற கம்பளியாடுபோல இருப்பார். அவர் மனத்துள்ளே கிடக்கும் சினிமா நட்சத்திரங்கள் மட்டும் எத்தனை என்று யாருக்கும் தெரியாது. அவருக்கு உலகத்திலே இரண்டே பொருள்கள் தெரியும். அவர் பெட்டிக்குள் இருக்கும் சினிமா நட்சத்திரங்களின் படங்கள்; மற்றொன்று புதிய புதிய பட்சணங்கள் செய்யும் வழிகள். மற்றப்படி அவர் வழிக்கு யாரும் போக மாட்டார்கள். அவரும் பிறர் வழியில் வரமுடியாது. நடமாட்டமே அவருக்குத் தனிப்பாதை. பெரிய உருவம்!

எங்கள் ஓட்டலில் வெளியாருக்குப் பந்தி பரிமாறுமுன், "சாப்பாடு தயார்" பந்தி பரிமாறுவதற்கு முன், உள்ளே பந்தி பரிமாறிப் பழகுவது பயிற்சியாகும். முதன்முதலாக, அங்கே உள்ள சிப்பந்திகள் (ஐம்பது பேராவது இருப்பார்கள்) இவர்களுக்குப் பரிமாறச் சொல்லுவார்கள். அவர்கள் பார்த்து அத்தாட்சி கொடுத்த பின்பே, வெளியே பரிமாற அனுமதிக்கப் படுவார்கள். எனக்கு இந்தக் கட்டம் வந்தது. இலைகளை வரிசையாகப் போட்டேன். தண்ணீர் தெளித்தேன். உப்பிலிருந்து பச்சடிவரை பரிமாறினேன். இன்ன பதார்த்தம் இன்ன இடத்தில் இருக்க வேண்டும் என்று குறிப்பாகச் செய்தும் விட்டேன். திடீரென்று, "எந்த ரெக்குருட்டுப் பயல் பரிமாறினான்!" என்ற இடியோசை வந்தது. சரக்கு மாஸ்டர் குரல் அது. நான் நடுங்கிப் போனேன். வெகு பவ்வியமாக, "ஏன் அண்ணா, தலைவாழை இலை போடுகிறேன், தவற்றுக்கு மன்னிக்க வேண்டும்" என்றேன்.

"போடா நீயாக்கண்டு தப்பிச்சே" என்றவர் பந்தியில் எல்லோரும் போட்டுக் கொள்ளும் எதிர்ப் பக்கம் போட்டுக் கொள்ளாமல், பக்க வாட்டில் வலது கைப் பக்கம் இலையை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார். அவரால் இலைக்கு முன்னால் குனிந்து சாப்பிட முடியாது. அவருக்கு வலக்கைப் பக்கம் இலை கிடந்தால்தான் உணவைச் சிரமமின்றி எடுக்க முடியும். இந்த சூட்சமம் அறிந்துகொள்ள வேண்டியதுதான். யாராவது பெரிய உருவங்கள் வந்தால், பக்க வாட்டில் வலது கைப் பக்கமும் இலை போட்டுப் பரிமாற வேண்டும் என்ற பாடம் அன்றே படித்துக் கொண்டேன்.

சரக்கு மாஸ்டர் அண்ணா ரொம்ப நல்லவர். அதிகாலையில் அவர் கையால் காப்பி கலந்து குடிக்க ஒரு கூட்டம் வந்து, பின்னால் சமையல் கட்டிலே நின்று கொண்டிருக்கும். அவர் கையால் எதைச் செய்தாலும் தனி ருசி; அடிபட்டாலும் யானைத் துதிக்கையால் பட்ட மாதிரி இருக்கும் என்று சொல்லுகிறார்கள். ஆண்டவன் எனக்கு அந்த அனுபவத்தை மட்டும் வைத்து விடக்கூடாது.

சரக்குமாஸ்டர் உருவம் எப்படியோ அதற்கு எதிர்த்திசையில் 'ஒரு டேபிள் கிளீனர்' இருக்கிறான். மூங்கில் குச்சி போல வெகு ஒல்லி. அவனுக்குத்தான் எப்படிப்பட்ட தொண்டை தெரியுமா! எந்தச் சங்கீத வித்வான் பாட்டையும் அவன் பாடிக் காட்டுவான். கடம் வாசிப்பது

போலவாசிப்பான். நாயனம் ஊது வான். தமாஷ் காட்சிகளை அப் படியே நடிப்பான். பெண் குரலாக அவன் மாற்றும் குரல்கள் ஆகா... ஆகா! ஜாங்கிரியும் ஜிலேபியும் போல ருசிக்கும். எங்களுக்குப் பொழுதுபோக்கும் ரேடியோவும், காமடியனும் அவனே. பாவம்! அவனுக்கு உள்ள திறமைகள் இத் தனை இருக்கும் சினிமாவுக்கு ஏற்ற உருவம் இல்லையே என்று நாங்கள் ஏங்குகிறோம். அவனைத் தவிர சிப் பந்திகள் எல்லோரும் என்ருவது பிரபல நடிகர்களாய் வரமுடியும் என்று நம்பிக் கொண்டிருக்கிருர் கள். அடடா, இந்த நம்பிக்கையே தருநியற்றவர்களிடம்தான் அதிக மாக இருக்கும் போலும்!



பள்ளிக்கூடத்தில் மாஸ்டர்கள் (டிரில் மாஸ்டர், டிராயிங் மாஸ்டர், என்று) இருப் பது போல இங்கேயும் இருக்கிருர்கள். அறவை மாஸ்டர் என்று ஒருவர் கட்டையாக, குட்டை யாக, கருப்பாக இருப்பார். சற்று வழுக்கை. அவர் எழுந்து வந்தால், செக்குலக்கைதான் தலை கீழாக நடந்து வருகிறதோ என்று தோன் றும். அந்த மனுஷன் ஆட்டுக்கல் முன்னுல் உட்கார்ந்தால், படிப்படியாக எத்தனை படி விழுந்தாலும் குழவி ஓடிக் கொண்டிருக்கும். தலையும் அதே வேகத்தில் ஆடிக் கொண்டிருக் கும். தலை நின்ருல் குழவி நின்றேதீரும். தலையை ஆட்டி ஆட்டி, வேலையின் சிரமம் தெரியாமல் செய்து கொண்டதால், அவருக்கு வேறு வேலைகள் செய்தாலும் தலையாடும். "நமக்கு, அது வேண்டும்" என்பதை முன்னுகத் தலையாட் டித்தானே நாம் கேட்போம்! அவரோ ஆட்டுக் கல் குழவிபோலத் தலையை ஒரு சுற்றிச் சுற்றித் தலையாட்டினுல் வேண்டும் என்று பொருள்; வேண்டாம் என்ருல் நாம் இடசாரி வலசாரி அசைப்போம்; அவரோ எதிர்த் திசையில் தலையை உருட்டுவார். அண்ணுச்சி! இதை நீங்கள் ஒரு முறை செய்து பாருங்கள். அப் போதுதான் நான் சொன்னது புரியும். நமக் குத் தலை சுளுக்கிக் கொள்ளும், ஒரு முறைக்கு மறுமுறை சுற்றினுல்.

அவியல் அண்டு அடை மாஸ்டர் என்பதாக ஒருவர் இருக்கிருர். மற்ற நாளில் இவர் என்னைப்போல சர்வர். திங்கட்கிழமை மட்டும் டிப் பிடியார். அண்ணு நிலே எது எதற்கோ கொடுக் கிருர்கள், பாராட்டுகிருர்கள். இந்த மனுஷன் போடுகிற அடை யும் இந்த அவிய லும் ஒரே பிர மாதம். ஒரு சிறு ரகசியம். போடு கிறதில் நாளில் ஒரு பங்கு நாங்கள் சிப் பந்திகளே எடுத்து ஒளித்து வைத்து விடுகிறேம். அன்று



மாலையும் அதுதான்; அன்று இரவு எல்லோரும் லங்கணம் என்று, 'மீல்ஸ் டிபார்ட்மெண்டு'க்குச் சொல்லி, அடையை அடைத்துவிடு வோம். அந்த மாஸ்டர் மட்டும் அடையைத் தொடுவதே இல்லை. பாவம்! அன்றைக்கு அவர் பட் டினி. சுக்குக் கஷாயம் போட்டுக் குடிக்கிருர்.

நான் மாஸ்டர்கள் பற்றியே சொன்னுல் நீங்கள் கோப மாஸ்டர் ஆகிவிட்டால் என்ன செய்கிறது! எனக்குத் தூங்கும் இடம் கிடைத் திருக்கும் யோகியைச் சொல்லா விட்டால் இன்றைக்குத் தூக்கம் வராது. காய்கறி அறைக்கு அருகில் எனக்குத் தூங்கும் இடம். அண் ணுச்சி, சமைத்த வெங்காயம் காய்கறிகள் தருகின்ற இன்பம் இனி; அந்த மணம் போன்ற இன்பம் திருமணத்தில் இருக்க லாம். ஆனுல், பச்சைக் காய்கறிகள் முக்கிய மாக வெங்காயம், பச்சை மிளகாய், அழுகல் கருவேப்பிலை இங்கே தருகிற தொல்லைகள் சொல்லுக்கடங்கா. முன்னங்கியின் சாம்பார் ருசிக்கு உலகத்தையே கொடுக்கலாம். அது பச்சையாக இருக்கும்போது தருகிற நெடிக்கு ஏழு உலகத்தைக் கொடுத்தாலும் எட்டாவது உலகத்தையும் தாண்டிப் போய் நாறும். பச்சைக் காய்கறிகள் தூக்கத்தைக் கெடுப் பதில் எமன். போதாக்குறைக்குக் கடலைமாவு மூட்டை. தப்பித்தவறி மிளகாய் வற்றல் மூட்டை வந்து விட்டாலோ நாம் தும்மிக் கொண்டே இரவுக் காலத்தைக் கழிக்கலாம். பகலில் பரிமாறும்போது நாம் தும்மினுல், எப்படி இருக்கும், சாப்பிடும் கனவான்களுக்கு! மிளகாய் மூட்டை அடுக்கும் பக்கத்தில் படுத்து விட்ட நான் பட்டபாடு நீங்கள் புரிந்துகொள்ள முடியாது. மற்றப்படி எனக்கு இடம் வெகுவாகப் பிடித்திருக்கிறது. மேலும், முதலாளியும் அன்பாகவே பேசுகிருர். சிப்பந்தி களும் மரியாதையாகப் பேசுகிருர்கள். இன் னும் இரண்டொரு ஓட்டல்கள் ஏறி இறங்கி னுல் வெளிநாடு அமெரிக்கா, பிரான்சு, போய் வந்தவர்கள் அனுபவம் எனக்கும் வந்துவிடும் என்று என் சக — தொழிலாளிகள் சொல்லுகிருர்கள். சமீப காலத்தில் அடுத்த ஓட்டல்போக ஆசையில்லை.

இதே ஓட்டலில் அவரவர்கள் அனுபவம், சம்பளம், உத்தியோகம் பொறுத்துப் படுக்கும் இடங்கள் வைத்திருக்கிருர்கள்; சாப்பாட்டில் மட்டும் வித்தியாசமே கிடையாது. எல்லோருக்கும் ஒரே கரண்டியும் ஒரேவிதமான உணவுகளும் கிடைக் கின்றன. படுக்கை வசதியாக உள்ள பகுதியில் போய்ச் சேர இன்னும் சிறிது காலம் பிடிக்கும். நீண்டகால சர்வீஸ் ஆட்கள் தயவைப் பிடித்துக் கொண்டால், அவர்களுக்கு எடுபிடி வேலைகள் செய்தால், காற்ரேட்ட மான இடங்கள் கிடைக்கின்றன. இருக்கும் சௌகரியங்களைவிட இல்லாத துணைகளைத்தான் மனித

குலம் விரும்புகிறது; காணும் மனிதனுக்கவே இருப்பதற்கு இல்லாததை எண்ணி ஏங்க வேண்டியதாகிறது.

எங்கள் ஓட்டலில் பில் மாஸ்டர் (அதாவது யார் எத்தனை வகையே எவ்வளவு தொகை சொல்லுகிறார்கள் என்பதை அறிந்து உடனடியாக எழுதிக் கிழிப்பதில் வல்லவர்) ஒருவர் இருக்கிறார். இவர் முதலாளிக்கு வேண்டியவர். அவர் சொல்லுவார்: "டேய்! முதலில் உள்ளே வந்து வேலை கிடைத்தால் போதும் என்று சொல்வாய். வேலை கிடைத்தால் அரை வயிற்றுக்குப் போதும் என்பாய். வேலையையும் கொடுத்து முழு வயிறுக்கும் கொடுத்தால் எனக்கு என்றைக்கு ஓய்வு என்று கேட்பது மனிதத் தன்மை; இல்லாவிட்டால் அவன் மனிதன் ஆகமாட்டான். ஓய்வு கொடுத்தாலோ இன்ன தினம் ஓய்வு வேண்டும் என்று பிரித்துக் கேட்கச் சொல்லும். ஓய்வைக் கொடுத்து விட்டாலும் அவர்கள் கேட்கும் தினத்துக்கு மாற்ற வேண்டும். ஆகப் போக வேலைக்காக ஓட்டலுக்குள்ளே வரும் போது சொல்லுகிறதற்கும் வெளியே போகும்போது அடைகிற நன்மைகளுக்கும் சம்பந்தமே இல்லை. முடிவாக ஒரு பயல் அடைகிற நன்மை இந்த ஓட்டலை விட்டு வெளியே போவதுதான்." எனக்கு இது மிகவும் உண்மையாகப் படுகிறது.



சம்பளம் வேண்டாம், வெறும் சோறும் துணியும் போதும் என்று சொன்ன நபர்கள் அதிகச் சம்பளத்தை மறு மாதமே எதிர்பார்க்கிறார்கள். வசதியைப் பெருக்கிக் கொள்ளுவது தான் மனிதப் பண்பு போலும்! வேலையைக் குறைத்துக் கொள்ளுவதும் அதே மனிதப் பண்பின் சிகரம் போலும். இதை என்னால் அனுபவ முறையாக உணர முடிகிறது. உடம்பிலே சுகம் ஏற ஏற உழைக்காமலே இருக்க வேண்டும் என்ற புத்திகூட எனக்கு வருகிறது என்றால், அனுபவப்பட்டவர்கள் பாட்டை என்ன சொல்ல! என்னுடன் வேலை பார்க்கிற பையன்கள் வெளியே புறப்பட்டால், அவர்கள் காலேஜ் மாணவர்கள் போன்று, அல்லது ஜமீன்தார் வீட்டு மக்கள் போன்று உடை தரிக்கிறார்கள். பணத்தை அலட்சியமாக வைத்திருக்கிறார்கள். அனலிலும், தண்ணீரிலும் கைவிட்டுச் சம்பாதித்த அருமை அவர்களுக்குத் தெரிவதில்லை. ஏனோ, கஷ்டப்பட்ட சொத்து என்று இவர்கள் அறியாமல் போகிறார்கள். என் வேலைகள் நாளுக்குநாள் முன்னேற்றம் அடைகின்றன. டிபன் சர்வர், சாப்பாட்டு சர்வர் ஆகி விட்டேன். இப்போது அதற்கு அடுத்தபடியாக "பாமலி சர்வர்" என்ற பதவியும் அடைந்து விட்டேன். லேடீஸ் அன்டு பாமலி மட்டும் என்று ஒரு பக்கமாக மறைவுப் பலகையால் தடுத்திருக்கிறார்கள். அங்கே போக வேண்டிய தகுதி கிடைத்தாலே, பையன் நிலைத்துக் கொள்ளுவான் என்று பெயராம். அந்தத் தகுதி எனக்கு மிகவும் சீக்கிரம் கிடைத்து விட்டதாம்; மற்றவர்கள் சொல்லியே இதை அறிகிறேன். அண்ணாச்சி! தனியாகப் பெண்கள் முன்னால் பேசுவது என்பது முடிகிறது. கையில் பதார்த்தங்கள் வைத்துக் கொண்டு, தண்ணீர் கொண்டு வந்து பேசுவது என்பது கஷ்டமாகப் படுகிறது. பெண்களுக்கு நாணம் வரும் என்பார்கள். அந்த அறைக்குள் போகிற போது எனக்கு நாணமாக இருக்கிறது. மேலும் ஒரு சிரமம். ஆண்களுக்கு எதைக் கேட்டாலும் சிரித்துக்கொண்டு கேட்க வேண்டும்; 'பேமலி' அறையில் அதே கேள்வியைச் சிரிப்பு வராமல் கேட்க வேண்டும். எவ்வளவு கஷ்டமான வேலை. எங்கு சிரிப்புக் கூடாதோ அங்கே சிரிப்பதும், எங்கு சிரிப்பு வருமோ அங்கே அடக்குவதும் யார் செய்யக்கூடிய வேலை? நடிகன்தானே. ஒவ்வொரு சர்வரும் நடிகனாக மாறுகிறோம். உணவைப் பரிமாறுகிறோம் நாங்கள்; உணர்ச்சியைப் பரிமாறுகிறார்கள் நடிகர்கள்.

ஆண்களை விடப் பொல்லாதவர்கள் இந்தப் பெண்கள் என்று உலகம் சொல்லுகிறது. சாப்பாடு விஷயத்தில் ஓட்டலுக்கு வரும் பெண்கள் ரொம்ப நல்லவர்கள். அவர்கள் இணையாகச் சாப்பிடும்போதும், ஆண்கள் மத்தியில் சாப்பிடும்போதும் ரொம்பத் தொல்லை தருவார்கள். தனிப்பட வந்து ரொக்கம் கொடுத்துச் சாப்பிட்டால், வேண்டியது என்ன என்பதைக் கணக்காகச் சொல்லுவார்கள். அவர்களுக்குப் பரிமாறுவது எளிது.

பந்தி பரிமாறுவதிலும் பெண்களுக்கு என்றால் விரைவாகப் பரிமாறலாம். வீடுகளில் நேரம் அதிகமாக்கும் பெண்கள் ஓட்டல்களில் வெகு விரைவாகச் சாப்பிடுகிறார்கள் என்பது என்னுடைய அனுபவம். மொத்தத்தில் ஓட்டலில் பெண்கள் பெண்களாக நடந்து கொள்ளுகிறார்கள். ஆண்களோ, தொல்லை தரும் பேர்வழிகள். முக்கியமாக, காசு இல்லாத ஜம்பப் பேர்வழிகள் தருகிற தொல்லைகள் மிக மிக அதிகம். மறதி மாஸ்டர்கள் வந்துவிட்டால், அவர்கள் வைத்துப்போகும் பொருள்களுக்கு சி. ஐ. டி. வேலை பார்த்து உடனடியாக எடுத்துக் கொடுக்க வேண்டும். ஐயோ! இந்த ஆண்களில் தொல்லை பிடித்தவர்கள் வந்து விட்டால், அவர்களைச் சமாளிக்கப் பெண் சர்வர்களால் மட்டுமே முடியும். ஆனால், ஏனோ இதைச் செய்கிறவர்கள் மட்டும் இன்னும் ஆணுக்குப் பெண் சமம் என்று முன் வரவில்லை. பெண் சமூகம் இதைக் கவனித்தால், ஆண் வர்க்கத்துக்கு வேலை இல்லாத் திண்டாட்டம் வந்து விடலாம் என்று பயப்படலாம். தகாத வேலைக்குப் போய்ச் சங்கடப் படுவதைவிட இதைச் செய்யலாம் அல்லவா!

மற்ற விவரங்கள் அடுத்த கடிதத்தில்.

தங்கள் வணக்கமுள்ள,

சர்வர். ஐயாத்துரை




# ஆமாம்! ரின்ஸோ அதிவெண்மையாக வெளுக்கிறது

அற்புத சோப் பவுடராகிய ரின்ஸோ, அடித்துத் துவைக்கவும் அழுத்தித் தேய்க்கவும் அவசியமில்லாமல், வெள்ளைத் துணிகளை கண்ணைப் பறிக்கும் வெண்மையாக வெளுக்கிறது. பிரமிக்கத்தக்க முறையில் அது எல்லா அழுக்குகளையும் அகற்றுகிறது. உங்கள் வீட்டின் சகல துணிகளுக்கும், வெண்மையோ, நிறமுள்ளவையோ எல்லாவற்றிற்கும் ரின்ஸோ உபயோகியுங்கள்.




...இந்த அற்புத சோப் பவுடரை
உபயோகிக்கும்போது, அழுத்தித்
தேய்க்க வேண்டியதேயில்லை

R. 6-50 TM.




ஆனந்தி

அத்தியாயம் 12

## நெருஞ்சி முட்கள்

சுலோசனா அன்று என்னை எவ்வளவோ பிரியத்துடனும் அன்புடனும் தான் உணவருந்த அழைத்துச் சென்றாள். இந்துவைப் பற்றிய கவலையும் துயரமும் சுலோசனாவின் அளவு கடந்த அன்பை வேம்பாகக் கசக்கச் செய்தன. அவளோடு வேண்டா வெறுப்போடு சாப்பிடச் சென்றேன்.

சாப்பிடத் தொடங்கியதும், "சுலோசனா! சற்று முன் பாடிக் கொண்டிருந்தீர்களே, அதை யார் உங்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள்? மிக இனிமையாக இருந்தது" என்றேன்.

"இந்துமதியைப் பற்றிச் சொன்னேனல்லவா? அவள் பாடுவாள். அவளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபடியால் அந்தப் பாட்டையும் என்னையறியாமல் பாடியிருக்கிறேன்" என்றாள் சுலோசனா.

எங்களுக்குப் பரிமாறிக்கொண்டிருந்த சமையல்காரன் முத்து, "அம்மா! இன்று மாலை நம் வீட்டுக்கு யார் வந்தார்கள் தெரியுமா?" என்றான்.

"யார்?" என்று கேட்டாள் சுலோ.

"முன்னே இங்கே இருந்த இந்துமதி வந்தார்கள். நம்ம ஐயாவின் அறைக்குப் போனார்கள். நான் உள்ளே போய் விட்டேன். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் காப்பி எடுத்துக் கொண்டு ஆபீஸ் அறைக்குப் போனேன். அதற்குள் போய் விட்டார்கள்" என்றான்.

சுலோசனா திகைத்து உட்கார்ந்திருந்தாள். நானும் இந்து எதற்காக வந்திருப்பாள் என்று யோசித்தேன்.

சுலோசனா பேசவேயில்லை.

"என்ன நீங்கள்கூட இப்படி மெய் மறந்து போக ஆரம்பித்துவிட்டீர்களே?" என்றேன் கேலியாக.

சிந்தனையிலிருந்து விழித்துக் கொண்ட சுலோசனா, "எனக்கு அவளைப் போய்ப் பார்க்க வேண்டுமென்று

ஆசையாக இருக்கிறது. அவள் எதற்காக அப்பாவைப் பார்க்க வந்திருக்கக் கூடுமென்று புரியவில்லை'' என்றாள்.

''ரமேஷ் கூறியதை மறந்துவிட வேண்டாம், சுலோசனா! என்ன காரணத்தாலோ தந்தைக்கு அவளை அடியோடு பிடிக்கவில்லை என்பது நன்றாகத் தெரிகிறது. வீணாகச் சச்சரவுகளுக்கு இடம் கொடுக்க வேண்டாமென்று எனக்குத் தோன்றுகிறது. அந்தப் பெண் இங்கே வந்தாள் என்பதை அவர் ஏன் கூறாமல் மறைக்க வேண்டும்? அதிலிருந்தே அவளை அவருக்குப் பிடிக்கவில்லை என்பது நிதர்சனமாகத் தெரியவில்லையா?''

''அவருக்கு இந்துவைப் பிடிக்காமல் இருப்பதில் என்ன அதிசயம் இருக்கிறது?'' என்று கூறி நிறுத்தினாள் சுலோசனா. ஏதோ சொல்ல வந்ததை அழுத்திப் பிடித்து அவள் நிறுத்திய மாதிரி எனக்குத் தோன்றியது.

'பாவம்! எவ்வளவு நல்ல குணம்? இந்துவைப் பற்றி ஏதும் கெடுதலாகச் சொல்லச் சுலோவுக்கு இஷ்டமில்லை' என்று எண்ணினேன்.

நான் சுலோசனாவிடம் இந்துவைப் போய்ப் பார்க்க வேண்டாமென்று கூறியபோது உண்மையாகவே என் மனத்தில் பட்டதைத்தான் கூறினேன். சுலோசனா இந்துவைப் பார்க்கப் போனாளானால் வீணாகச் சச்சரவுகள் ஏற்படுமெனக் கருதினேன்.

படுக்கையில் போய்ப் படுத்தபிறகு நிதானமாக யோசித்தேன். எதற்காக இந்து பத்மநாபனைப் பார்க்க வந்திருப்பாள்? நான் அவளிடம் 'பத்மநாபன் கூறியதெல்லாம் உண்மை' என்று கூறினேன் அல்லவா? ஆகவே அவளுக்கு ரொம்ப ஆத்திரம் உண்டாகியிருக்கும். தன்னைப் பற்றி அவர் ஏதோ அவதூறாகப் பேசியிருக்கிறார் என்று ஊகித்திருப்பாள். அதைக் குறித்து அவரைச் சண்டை பிடிக்க வந்திருப்பாள்.

இந்துமதி பத்மநாபனிடம் வந்து சண்டை பிடிப்பாளா? அவளால் அது முடியுமா?

ஏன் முடியாது? இன்று என்னிடம் அவள் பேசிய தோரணையிலிருந்தே எவ்வளவு தூரம் அவள் துணிந்துவிட்டாள் என்று தெரியவில்லையா? பழைய இந்துவாக இருந்தால் அப்படிச் செய்ய முடியுமா? கட்டாயம் பத்மநாபனைச் சண்டை பிடிக்கத்தான் வந்திருப்பாள். பணம் நிறைய இருக்



ரும். சிநேகிதர்களும் நிறைய இருப்பார்கள். தைரியமும் வந்து விட்டது. அதுதான் பெண்களுக்கு அதிக சுதந்திரம் கொடுக்கக் கூடாது என்பது. கொஞ்சம் சுதந்திரம் கிடைத்து விட்டால் தலைகாலே புரிவதில்லை. இருந்தாலும் இந்துமதி இப்படி மாறிப் போவாளென்று நினைத்திருக்க முடியுமா?

''பார்த்தாகி விட்டதல்லவா? போய் வாருங்கள்'' என்று விரட்டி விட்டாளே, சே! என்ன அவமானம்?

பத்மநாபனை இந்து பார்க்க வந்த பிறகு எனக்கு இன்னும் வெறுப்பு ஏற்பட்டது. உண்மையாக நான் கோபம் இல்லாமல் யோசித்துப் பார்த்திருந்தேனானால் அவள் பத்மநாபனைப் பார்த்துச் சண்டை பிடிக்க வந்ததிலிருந்து அவளுக்கு என்மீது இருந்த அன்பு மாறவில்லை என்பதை ஊகித்திருக்கலாம்.

என்னிடம் பத்மநாபன் ஏதோ அவதூறு சொல்லிவிட்டாரென்பதனால் தானே அவளுக்கு ஆத்திரம் உண்டாகியிருக்க வேண்டும்? என்னிடம் அவளுக்கு அன்பில்லை என்றால் அவள் நான் சொல்லியதை ஏன் பொருட்படுத்தியிருக்க வேண்டும்?

இதை அன்று என்னால் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. கோபம் என்னும் இருள் என் அறிவையே மூடி மறைத்து விட்டது.

இந்துவின் பணம் தன்னிடம் இருந்ததாகப் பத்மநாபன் சொன்னாரல்லவா? அது எனக்கு ஞாபகம் வந்தது. அதைத் திரும்பக் கேட்பதற்கு வந்திருப்பாள். பணம் சேரச் சேர ஆசை அதிகமாகத் தானே ஆகும்?

கடைசியாக எனக்கு என்மீதே அளவில்லாத கோபம் வந்தது. இப்படியெல்லாம் நெஞ்சு அலைகிறதே என்று அதன் மீதும் எனக்குக் கோபம் வந்தது.

ஒரு பெண் பதினைந்து வயதில் ஒருவனைப் பார்த்து விரும்பினாளென்றால் அப்படியே இருக்க வேண்டுமென்று கட்டாயமா? அப்போது அவள் குழந்தைப் பருவத்தைத்தானே அடைந்திருந்தாள்? பெரியவளாகும்போது எண்ணங்கள் மாறியிருக்கலாம். இரண்டு மாதங்கள் பழகிய எனக்கு அவள் அடிமையாக இருக்கவேண்டுமென்று எதிர்பார்ப்பது என்னுடைய அறியாமையல்லவா என்று தோன்றியது.

இந்த வாதத்தை மனம் ஒப்பவில்லை. இப்படியெல்லாம் குழம்பிக் கொந்தளித்த மனத்துடன் அன்றிரவு தூங்க முயற்சி செய்தேன். இயற்கை அன்னை நல்ல வேளையாக இந்தத் தூக்கம் என்னும் வரத்தை அளித்திருக்கிறாள். அது இல்லாவிட்டால் சிந்தனை செய்தே மனிதனுடைய அறிவு குழம்பிப் போய் விடும்.



காலையில் எழுந்த உடனே நான் பத்மநாபனுடைய அறைக்குச் சென்று, "எனக்கு லீவு முடிந்து விட்டது. நான் கல்கத்தாவுக்குப் புறப்பட வேண்டும்" என்று கூறினேன்.

"எனக்கும் இங்கே வந்த காரியம் முடிந்து விட்டது. இன்றிரவு சில நண்பர்களை நம் வீட்டில் சாப்பிடக் கூப்பிட்டிருக்கிறேன். நாளையே புறப்பட்டு விடலாம்" என்றார் பத்மநாபன்.

அன்று முழுவதும் நான் வீட்டை விட்டே அசையவில்லை. உடல் சோர்ந்து, உள்ளம் சோர்ந்து, இதயம் சோர்ந்து படுக்கையிலேயே கிடந்தேன். கலோசனு என்னை வந்து பார்த்தபோது 'தலை வலி' என்று சொல்லி வைத்தேன்.

விருந்தினர்களைக் கவனிக்க வேண்டிய கடமையும், விருந்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டிய பொறுப்பும் அவளுடையதாக இருந்தபடியால் அவள் என் அறைக்கு அதிகமாக வரவில்லை. அது எனக்கு ரொம்பச் சௌகரியமாக இருந்தது.

அவள் இரண்டு தடவை காப்பி எடுத்துக் கொண்டு மேலே வந்த போது, "என்னால் உங்களைச் சரியாகக் கவனிக்க முடியவில்லை. மன்னித்துக் கொள்ளுங்கள்" என்று வருத்தத்துடன் கூறி விட்டுச் சென்றாள்.

◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊



பாட்டி :—குழந்தை ஒரு முழு ரூபாயை விழுங்கி விட்டது. அதை உங்களால் எடுத்துக் கொடுக்க முடியுமா?
நாட்டு வைத்தியர் :—பேஷா எடுத்து விடுகிறேன். எனக்கு என்ன தருவீர்கள்?
பாட்டி :—நீங்கள் அதில் அரை ரூபாய் எடுத்துக் கொள்ளுங்கள். எனக்கு அரை ரூபாய் கொடுத்து விடுங்கள் போதும்!

இந்துவின் அறையில் படுத்துக் கொண்டு இருந்தபடியால் அவளுடைய நினைவு மிக அதிகமாக தோன்றிக் கொண்டிருந்தது. அந்த மூலையில் தன் பெட்டியை வைத்திருப்பாள். இந்தப் பக்கத்தில் உள்ள 'கோட் ஸ்டாண்டி'ல் தன் சேலைகளைப் போட்டு வைத்திருப்பாள். ஜன்னலோரத்தில் நாற்காலியில் உட்கார்ந்து படித்திருப்பாள். இதே படுக்கையில் படுத்துக் கொண்டு என்னைப் பற்றிச் சிந்தனை செய்து கொண்டு இருந்திருப்பாள். அப்போது அவள் கபடமற்ற குழந்தை உள்ளமுடையவள் தானே. பாதிரித் தோட்டத்தில் நான் அவளுக்குப் பாட்டு சொல்லிக் கொடுத்தது ஞாபகம் வந்திருக்கும். அதை வாய் விட்டுப் பாடியிருப்பாள். கலோசனுவின் அறையில் அது கேட்டிருக்கும். உடனே அவள் இந்த அறைக்கு வந்து இந்துவை நன்றாகப் பாடச் சொல்லிக் கேட்டிருப்பாள். அப்போது தான், "மாலைப் பொழுதினொரு" என்ற பாட்டைச் கலோசனுவுக்குப் பாடிக் காட்டியிருப்பாள்.

அந்த இந்துமதி அப்படியே இருந்திருக்கக் கூடாதா? அவள் ஏன் அமரதாராவாக மாற வேண்டும்? என் இதய வானத்தில் உல்லாச பவனி வரும் பூரண சந்திரனை யாரோ பறித்துக் கொண்டு விட்டார்களே! என் இதயம் இருண்டு விட்டதே!

எழில் மிகுந்த தண்மதி எதற்காக மின்னும் நட்சத்திரமாக வேண்டும்? அவள் அப்படியே இருந்திருக்கக் கூடாதா என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ஒரு பக்கத்துச் சுவரில் சற்று உயரத்தில் இரண்டு ஆணிகள் அடிக்கப்பட்டிருந்ததைப் பார்த்தேன்.

இங்கே யாருடைய படத்தை இந்து மாட்டி வைத்திருப்பாள்? என்னுடைய படம் அவளிடம் இல்லை. அதனால் அவளுடைய அன்னையின் படத்தைத்தான் மாட்டி வைத்திருப்பாள். இப்படி என் எண்ணங்கள் முடிவேயில்லாமல் வளர்ந்து கொண்டே இருந்தன.

சுமார் ஆறுமணிக்குச் கலோசனு என் அறைக்கு மறுபடியும் வந்தாள்.

"தலைவலி எப்படி இருக்கிறது மிஸ்டர் ராய்?" என்று கேட்டாள்.

"தேவலை!"

"அப்படியானால் ஒரு வேண்டுகோள். இன்றிரவு விருந்தில் நீங்கள் கலந்து கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் எனக்கு ரொம்ப வருத்தமாக இருக்கும்."

"எனக்கு அவ்வளவு அவசியமாகப் படவில்லை, கலோ! யாரோ உங்களுக்குத்



குளுமை!...
குளிர்ச்சி!...
கு தூகலிப்பு!










ANTISEPTIC
DETTOL

# ஆடை ததும்பும்

# கஸ்டர்ட்

## தயாரிக்கும் வழி



...மீண்டும்
மீண்டும் விரும்பிச்
சாப்பிடச் செய்யும்.




3¼ பழக்கரண்டி அளவு ப்ரௌனன் அண்டு போல்ஸன் கஸ்டர்ட் பவுடர், 4 பழக்கரண்டி அளவு சர்க்கரை, 1 பைண்ட் பால் இவைகளை எடுத்துக் கொள்ளுங்கள். கஸ்டர்ட் பவுடரையும், சர்க்கரையும், ஒன்றாகப்போட்டு சிறிதளவு காய்ச்சாத பாலுடன் வழுவழுப்பான ஆடை ஏற்படும் வரை கலக்குங்கள். மீதிப் பாலைச் சட வையுங்கள். பிறகு கஸ்டர்ட் பவுடரை கலவைப் பாலுடன் சேர்த்து கொதிக்கும்வரை கிளறுங்கள். ஒரு நிமிஷம் இது கொதிக்கட்டும்.



**கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) லிட்.**

பம்பாய்-1 கல்கத்தா-1

தெரிந்தவர்கள்தானே வரப்போகிறார்கள். நான் கலந்து கொள்ளவில்லை.''

கமலாவின் முகம் வாடியது. ''அப்பா கூடச் சொன்னார். உங்களைத் தயாராகச் சொல்லும்படி என்னிடம் கூறினார். தயவு செய்து எனக்காக வரக்கூடாதா? வேறு எங்கும் போகவில்லையே. நமது வீட்டில்தானே?'' என்றாள்.

கடைசியில் அரைமனத்துடன் தயாராவதாகக் கூறினேன்.



சுலோசனா அன்று என்றையும் விடச் சோபிதமாக அலங்காரம் செய்து கொண்டிருந்தாள். தலையை அழகாகக் கொண்டை போட்டுக் கொண்டு அதில் நல்ல மணமான மல்லிகைப் பூவைச் சக்கரம்போல் சுற்றியிருந்தாள். ஆகாய நீல வண்ணமுடைய காசிப் பட்டு அவளை அலங்கரித்தது. அதில் நட்சத்திரங்களைப் போல் 'பளிச் பளிச்' என்று மின்னிய சரிகைப் பூவேலை மிக அழகாக இருந்தது.

ஆனால் அந்த நட்சத்திரங்கள் கூட எனக்கு அமரதாராவையே நினைவூட்டின. தோட்டத்தில் உட்கார்ந்து விருந்தினர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தேன். வானத்தில் வைரங்களை வாரி இறைத்த மாதிரி ஜொலித்த விண்மீன்களைப் பார்த்தபோது அவள் நினைவு தான் வந்தது. இந்த நட்சத்திரங்களைப் போல் அவளும் எட்டாத தூரத்துக்குப் போய் விட்டாளே. இந்து! இந்து! யுகம், யுகமாய்க் காத்திருப்பேன் என்றாயே.........உன் வாக்குறுதி என்னவாயிற்று?......

யாரோ இரண்டு பேர் வந்தார்கள். என் எண்ண ஓட்டத்துக்குத் தடை ஏற்பட்டது. அவர்களைப் பத்மநாபன் எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

சற்றைக்கெல்லாம் பேராசிரியர் கோதண்டராமன் வந்தார். எனக்கு அவரைப் பார்த்ததும் ஒரே சந்தோஷமாக இருந்தது. கைகளைக் கூப்பி நமஸ்கரித்துக் கொண்டே, ''உங்களை இன்று சந்திப்பேன் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை'' என்றேன்.

அவரும் சந்தோஷமாக அன்போடு, ''நீ இப்போது மாஜிஸ்ட்ரேட்டாக இருக்கிறாயாமே? ரொம்ப மகிழ்ச்சி. சீமை சென்றதனால் தானே இப்படி இருக்க முடிகிறது? என்னுடன் சரித்திர ஆராய்ச்சி செய்து கொண்டிருந்திருந்தால் அதிக பட்சம் ஒரு கல்லூரி ஆசிரியராகத்தானே நீ ஆகியிருக்க முடியும்?'' என்று கூறினார். அவருடைய புகழ் மொழிகளைக் கேட்டு எனக்கு எப்படியோ இருந்தது.

நான் அவரிடம் என்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். அந்தச் சமயத்தில் பத்மநாபன் என் தோளைத் தொட்டு, ''மிஸ்டர், ராய்! உங்களுக்கு இன்றையப் பிரதம விருந்தாளியை அறிமுகம் செய்து வைக்க வேண்டாமா?'' என்று கூறினார்.

நான் எழுந்து கை கூப்பினேன்.

''இவர்தான் ஈசுவர மூர்த்தி. என்னுடைய நண்பர். இவருக்குத்தான் 'ராவ் பகதூர்' பட்டம் இப்போது கிடைத்திருக்கிறது'' என்றார் பத்மநாபன்.

ஆயிரம் தேள்கள் ஒருவனைக் கொட்டி விட்டால் அவனுக்கு எந்தவிதமான உணர்ச்சி ஏற்படும் என்று யாரும் கூற முடியாது. அன்று நான் அடைந்த உணர்ச்சியை வேண்டுமானால் அதற்கு ஒப்பிடலாம். கொஞ்சங்கூட எதிர் பார்க்காமல் ஈசுவரமூர்த்தியைச் சந்தித்ததும் எனக்குப் பிரமையாகப் போயிற்று.

என் கையை அவர் பிடித்துக் குலுக்கிய போது நான் மரத்தைப் போல் உணர்ச்சியற்று நின்று விட்டேன்.

பத்மநாபன் அதற்குள் பேராசிரியர் கோதண்டராமனை ஈசுவர மூர்த்திக்கு அறிமுகம் செய்து வைத்தார். அவர்கள் இருவரும் சில உபசார வார்த்தைகள் பரிமாறிக் கொண்டார்கள். அதற்குள் எனக்கும் புத்தி சற்று வேலை செய்ய ஆரம்பித்தது.

ஈசுவரமூர்த்தி சற்று அப்பால் சென்றதும் அவரை நன்றாகக் கவனித்தேன். நாங்கள் தோட்டத்தில் உட்கார்ந்திருந்தபடியால் அதிக வெளிச்சம் இல்லை. அவர் போய் உட்கார்ந்த இடத்தில் இலேசாக வெளிச்சம் பரவியிருந்தது.

நான் ஈசுவர மூர்த்தியைப் பார்த்து எத்தனையோ நாட்கள் ஆகி விட்டன. ஆனால் அவருடைய தோற்றம் மாத்திரம் சிறிதும் மாறவில்லை. அவருக்குத் தலைகூட நரைக்க வில்லை. அதே மாதிரி அங்கவஸ்திரம், ஜிப்பா, ஜரிகை வேஷ்டி, கண்ணாடி அணிந்திருந்தார்.

எப்படி இவர் சிறிதும் மாறுமலிருக்கிறார் என்று வியப்பு உண்டாயிற்று.

நான் படித்த ஆங்கில நாவல் ஒன்று ஞாபகம் வந்தது. டோரியன் கிரே என்ற அழகான இளைஞனின் படத்தை ஒரு சித்திரக்காரன் வரைகிறான். அந்த இளைஞன் செய்யும் பாபங்கள் எல்லாம் அந்தச் சித்திரத்தில் பதிகின்றன. இவன் சிறிதும் மாறுமல், வயதே ஆகாமல் இளைஞனாகவே இருக்கிறான். இந்த சகுவர மூர்த்தியின் விஷயத்திலும் அப்படி ஏதோ ஒரு மர்மம் இருக்க வேண்டும்.

என்னை ஒரு வேளை அடையாளம் கண்டு பிடித்திருப்பாரோ வன்று நினைத்தேன். இருக்கவே இருக்காது. அவருக்கு எப்படி என்னைத் தெரியும்? நான் சிறு பையனாக இருந்த போது பார்த்தது. இப்போது அவரால் அடையாளம் கண்டு பிடிக்கவே முடியாது. மேலும் கந்தசாமியின் பிள்ளை 'மாஜிஸ்டிரேட்' ஆக இருப்பானென்று அவர் கனவிலும் கருத முடியாதல்லவா?

கடவுளே! இவர்களுடைய சகவாசத்தில் மறுபடியும் நான் ஏன் வந்து மாட்டிக் கொண்டேன்? பத்மநாபன் இவரைத் தம்முடைய ஆப்த நண்பர் என்று கூறினாரே. இவருக்கு எதற்காக இந்த மனிதரிடம் இவ்வளவு சிநேகம்?

பத்மநாபனுக்கு சகுவரமூர்த்தியின் நடவடிக்கைகள் தெரிந்திருக்காது. சமூகத்தில் பதவியும், பணமும் உள்ளவர்களை எல்லாம் தம்முடைய நண்பர் என்று சொல்லிக் கொள்வதில் அவருக்குப் பிரியம் போலும்! அதனால் இவருடனும் சிநேகமாக இருக்கிறார் போல இருக்கிறது என்று நினைத்தேன்.

அன்று எனக்கு உணவே பிடிக்கவில்லை. கமலாசனா என்னைப் பார்த்து, "ஏன் நீங்கள் சரியாகச் சாப்பிடவில்லை?" என்று கேட்டாள்.

நான் நெற்றியைத் தொட்டுக் காட்டினேன். பிறகு பேசாமலிருந்து விட்டாள்.

சாப்பாடு ஆன பிறகு வெகு நேரம் வரை சகுவரமூர்த்தியும் மற்றவர்களும் பேசிக் கொண்டிருந்தார்கள். எனக்கு அங்கே உட்கார்ந்திருக்கவே சிறிதும் பிடிக்கவில்லை.

கமலாசனா தன் சிநேகிதிகளுடன் ஒரு பக்கத்தில் சளசள வென்று பேசிக் கொண்டிருந்தாள்.

யாரோ சினிமாப் படங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தார். வந்திருந்தவர்களில் ஒரு சினிமா டைரக்டர் இருந்தார். அவர் தாம் சமீபத்தில் எடுத்த படத்தைப் பற்றிக் கூறினார். பிறகு, "நான் வெகு சீக்கிரம் இன்னொரு படம் எடுக்கப் போகிறேன். அதில் அமரதாராவை நடிக்கும்படி கேட்டிருக்கிறேன்" என்றார்.

"அவள்தான் எந்தப் படத்திலும் நடிக்க இலேசில் சம்மதிப்பதில்லையாமே? அவளை ஏன் கேட்கிறீர்கள்?"

"அவள் ஒரு சிறந்த நடிகை. அதனால்தான்" என்றார் டைரக்டர்.

"அதே காரணத்தினால்தான் அவ்வளவு கர்வம் அவளுக்கு உண்டாகியிருக்கிறது."

"இல்லை ஸார்! அவள் ரொம்ப நல்லவள்தானும். கூட ஒரு மனிதன் இருக்கிறான், ராஜாராம் என்று. அவன்தான் இல்லாத ஆர்ப்பாட்டமெல்லாம் செய்து கொண்டு வருகிறானும்."

"அவன் யார்?"

"யாரென்று யாருக்குத் தெரியும்? ஒன்றுமில்லாத மடையன்களெல்லாம் இந்த மாதிரி யாரையாவது பிடித்துக் கொண்டு, அவர்களையும் உறிஞ்சிக் கொண்டு, மற்றவர்களையும் அதிகாரம் செய்கிறார்கள். இவர்களுக்கு 'நாய்க்குடை' என்று பெயர் வைக்கலாம்."

அதற்குள் ஒரு செந்தமிழ்ச் செல்வர், "நாய்க்குடைக்குப் 'புல்லுருவி' என்பதுதான் சரியான தமிழ்ப் பெயர்" என்றார்.

"இங்கே யாருக்குச் சரியான பெயர் வேண்டும்? விட்டுத் தள்ளுங்கள்!"

"ஆமாம்! அந்த அமரதாராவுக்கு என்ன வயதிருக்கும்?"

"சின்னப் பெண்தான் ஸார். இருபது வயதுதான் இருக்கும்."



போட்டோ எடுப்பவர்:-கொஞ்சம் சிரியுங்கோ, சார்!

பிரமுகர் :—போட்டோவுக்கு ஏகமாக சார்ஜ் பண்ணிவிட்டுச் சிரிக்க வேறு சொல்லுகிறீயே!



"ஒரு நாளுமிருக்காது. இருபது வயதுப் பெண் இவ்வளவு நன்றாக நடித்துப் பெயர் வாங்கி விட முடியுமாக்கும்? குறைந்த பட்சம் முப்பது வயதாவது இருக்கும். அவர்கள் அப்படித்தான் என்றும் பதினாறு வயதென்று சொல்லுவார்கள்."

உண்மையில் இந்தப் பேச்சுக்களைக் கேட்டபோது அவர்களையெல்லாம் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளி விட வேண்டுமென்று எனக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டு வந்தது.

பேராசிரியர் கோதண்டராமனாலும் இதைத் தாங்க முடியவில்லை. என்னைப் பார்த்துப் புன்னகையுடன், "இந்தக் கோஷ்டியில் எனக்கு இடமில்லை. நான் கிளம்புகிறேன். நீ ஒருநாள் வீட்டுக்கு வா" என்று கூறிவிட்டு எழுந்தார்.

பிறகு ஒவ்வொருவராக விடை பெற்றுக் கொண்டு சென்றார்கள்.

எனக்கு ஒரு வேளை பத்மநாபனே அமரதாராவின் பேச்சைக் கிளப்பி விட்டிருக்கலாம் என்று தோன்றியது. எனக்கு அவளைப் பிடிக்காமல் போக வேண்டுமென்றே அவர் இப்படியெல்லாம் சூழ்ச்சி செய்கிறாரோ என்று கூட எண்ணினேன்.

பிறகு, 'அப்படி இருக்காது. இந்துமதிதான் அமரதாரா என்பது எனக்குத் தெரியும் என்று அவர் அறிந்திருக்க வழியே இல்லை. தற்செயலாக எழுந்த பேச்சாகவே இருக்கலாம். நானாக ஏன் இவ்வாறு கற்பனை செய்து கொள்ள வேண்டும்?' என்று சமாதானம் செய்து கொண்டேன்.

சுலோசனா எல்லோரும் விடை பெற்றுச் சென்ற பிறகு, வாசலில் கிடந்த நாற்காலியில் உட்கார்ந்தாள். நான் உள்ளே போகக் காலடி எடுத்து வைத்தேன். "மிஸ்டர் ராய்! ஏன் இப்படி உள்ளே ஓடிக்கொண்டே இருக்கிறீர்கள்? இங்கே வந்து சற்று உட்காருங்களேன். நல்ல காற்று வீசுகிறது. தோட்டம் இந்த நிலா வெளிச்சத்தில் என்ன அற்புத அழகோடு மிளிர்கிறது பாருங்கள். நீங்கள்தான் பிரமாதமான ரஸிகராயிற்றே. சற்று நேரத்துக்குப் பின் உள்ளே போகலாம்" என்றாள்.

எனக்குச் சுலோசனா மீது கோபம் வந்தது. அவள் வரச்சொல்லி வற்புறுத்தியிருக்காவிட்டால் இந்தச் சகிக்க முடியாத பேச்சுக்களையெல்லாம் கேட்டிருக்க வேண்டாமல்லவா?

எனக்கு அதைப் பற்றிச் சூடாக இரண்டு வார்த்தைகள் சொல்ல வேண்டும் போலிருந்தது. "என்ன இருந்தாலும் சுலோசனா இன்று இங்கே பேசியவர்களின் பேச்சை என்னால் கேட்கவே முடியவில்லை. இவர்களெல்லாம் நாகரிகம் என்றால் 'ஸில்க்' சட்டையிலும், விலையுயர்ந்த 'ஸெண்டி'லும்தான் இருக்கிறதென்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள் போலிருக்கிறது. உள்ளம் முதிர்ந்து பண்படுவதல்லவா நாகரிகம்? மகா மோசம்" என்றேன்.

சுலோசனா சோகமாக முகத்தை வைத்துக் கொண்டு, "எனக்குந்தான் பிடிக்கவில்லை, மிஸ்டர் ராய்! ஆனால் நான் என்ன செய்வது? அப்பாவுக்காகப் பழகித்தான் ஆக வேண்டியிருக்கிறது" என்றாள்.

"இருந்தாலும் ஒரு பெண்ணைப் பற்றி இவர்கள் இத்தனை இங்கே விமரிசனம் செய்திருக்கக் கூடாது. அவளைப்பற்றி அவர்களுக்கு எத்தனையோ அபிப்பிராயம் இருக்கலாம். இப்படியா அதைப் பற்றிப் பேசிச் சிரிப்பது. ரொம்ப வெட்கக்கேடான விஷயம். நீங்கள் என்னை இங்கே இருக்கச் சொல்லி வற்புறுத்தியிருக்க வேண்டாம்."

சுலோசனாவுக்கும் சற்றுக் கோபம் வந்துவிட்டது. "அப்படி உங்களுக்கு விருப்பமில்லாவிட்டால் போய்விடுவதுதானே? எனக்கு நீங்கள் இருக்கவேண்டுமென்று தோன்றியது. ஆகையால் சொன்னேன். உங்களை நான் ஒன்றும் கட்டாயப் படுத்தவில்லையே. என் தலைவிதி நான் இருக்கவேண்டும்" என்றாள்.

அவளுடைய மனம் புண்பட்டு விட்டதென்று உணர்ந்து கொண்டவுடன் எனக்கும் ஏன் அப்படிக் கூறினேமென்று இருந்தது. சிறு வயதில் நான் ரொம்பக் கஷ்டங்களை அனுபவித்திருந்ததனாலோ என்னவோ தெரியவில்லை. யாருடைய மனத்தையும் நோகச் செய்ய என்னால் முடியவே முடியாது. அதேமாதிரி என்னையும் யாராவது, குத்தலாகச் சொன்னால், அதைப் பொறுத்துக் கொள்ள முடிவதில்லை.



ஆகவே சமாதானம் செய்யும் எண்ணத்துடன், "நான் உங்களை ஒன்றும் குறை சொல்லவில்லை, சுலோசனா. எனக்கு அவர்கள் மீதிருந்த கோபத்தில் சற்று ஆத்திரத்துடன் பேசிவிட்டேன் போலிருக்கிறது. நீங்கள் அதைத் தவறாக எண்ண வேண்டாம்" என்றேன்.

சுலோசனாவின் முகத்தில் மெல்லிய புன்னகை அரும்பியது.

"இங்கே உள்ள சம்பங்கிக் கொடி புஷ்பித்திருக்கிறது. என்ன வாசனை பார்த்தீர்களா?" என்றாள்.

சம்பங்கி என்றால் இந்துவுக்கு எவ்வளவு பிரியம்! இங்கே இந்து இருக்கக் கூடாதா என்ற ஏக்கம் என் கோபத்தையெல்லாம் துளைத்துக் கொண்டு வெளியே வந்தது.

* * *

நாங்கள் மறுபடியும் கல்கத்தாவுக்குச் சென்று விட்டோம். நான் என் வேலையில் மூழ்கி என் துயரத்தையும் ஏமாற்றத்தையும் மறக்க முயன்றேன். வேலை இல்லாத நேரத்தில் நெஞ்சத்தின் குமுறும் எண்ண அலைகளைப் பார்த்துக் கொண்டிருப்பேன். இந்துவைப் பற்றி நினைவுக்கு வரும் ஒவ்வொரு சம்பவமும் எனக்கு ஒரு பொக்கிஷமாக இருந்தது. அவைகளை யெல்லாம் நினைத்து ரசிப்பதிலும், இந்து அருகில் இருந்தால் எவ்வளவு சந்தோஷமாக இருக்கும் என்று கற்பனை செய்வதிலும், பிறகு அவள் அன்று அலட்சியம் செய்ததை நினைவுபடுத்திக்கொண்டு ஆத்திரப் படுவதிலுமாக நேரம் சென்றது.

கல்கத்தா வாழ்க்கை உப்பு சப்பில்லாமல் ஒரே மாதிரி இருந்தது. உயிர் வாழ்வதே எனக்குச் சுமையாக இருந்தது. என்ன செய்வதென்று அறியாமல் ஒட்டியும் ஒட்டாமலும் தாமரை இலைத் தண்ணீர் போல வாழ்க்கை சென்று கொண்டிருந்தது. பத்மநாபன் வீட்டுக்குப் போவதை நான் குறைத்துக் கொண்டேன். சுலோசனாவும் ரமேஷும் வந்து போய்க் கொண்டிருந்தார்கள். சில சமயங்களில் எங்கேயாவது வெளியில் போய் விட்டு வருவோம்.

குளிர்ந்த பிரதேசங்களில் முள்ளம் பன்றிகள் உஷ்ணப்படுத்திக் கொள்வதற்காக நெருங்கியிருக்குமாம். ஒன்றின் முள் இன்னொன்றின் மீது குத்திப் புண்படுத்துமாம். அவைகளுக்கு விலகிச் சென்றால் குளிர் பொறுக்க முடியாது. சேர்ந்து இருந்தால் உடல் முழுதும் ஊசிகளின் குத்தல், அந்த மாதிரி இருந்தது என் நிலை. வாழ்க்கையில் அநேகம் பேர் இப்படித்தானே திண்டாடுகிறோம்? சமூகம் என்பதே ஒரு முள்ளம்பன்றிக் கூட்டம் தான் போலும்!

ஒரு நாள் நான் அறையில் உட்கார்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்தேன். எதையோ புரட்டின போது 'அமர தாரா' நடிக்கும் 'இதய வீணை' என்னும் படம் கல்கத்தாவில் வரப் போவதாக ஒரு செய்தி வெளியாகியிருந்தது. இந்துவின் படத்தின் அருகில் 'பேரழகி' அமரதாரா என்று எழுதப்பட்டிருந்தது. எனக்கு அதைப் பார்த்தவுடனே முதலில் 'இதய வீணை' படத்தைச் சென்று பார்க்க வேண்டுமென்ற ஆவல் எழுந்தது. அடுத்தபடியாக இந்துவின் மீது அளவிலாத கோபம் வந்தது. இப்படியெல்லாம் அவளைப் புகழ மனிதர்கள் கிடைத்து விட்டதனால்தானே என் தூய்மையான பளிங்கு போன்ற அன்பை அவள் உணரவில்லை? சே! என்ன உலகம்?

நான் இப்படிச் சிந்தனையில் மூழ்கியிருந்த போது, எனக்குப் பின்னால் புடவை சரசரக்க யாரோ வரும் சத்தம் கேட்டது. (தொடரும்)

"என்ன ஜோரான படம்!
இதை வீட்டினுள்
எப்படி எடுத்தாய்?"





"அதுவா, நான் புதிய
கோடக் 'டிரை-X'
பிலிமை உபயோ
கித்தேன்—எல்லா
பிலிம்களைக் காட்டிலும்
இது வேகமான
பிலிமாகும்."

மங்கிய ஒளியிலும் கோடக் 'டிரை-X' பிலிம் உபயோகிப்பதால், நேர்த்தியான படங்களை நிச்சயமாகப் பெறலாம். இது கோடக் 'சூப்பர்-XX' ஐக் காட்டிலும் குறைந்தது இருமடங்கு வேகமான பிலிமாகும்.

உங்கள் கேமராவில் 'கோடக்' பிலிம் போட்டுப் படங்கள் எடுப்பதால் உங்கள் பிரயாசை வீணுவதில்லை என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். உபயோகத்திற்கு ஒன்றும், கைவசத்திற்கொன்றுமாக எப்பொழுதும் இரண்டு ரோல்கள் வாங்குங்கள்.




கோடக் லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)
பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்



# அழகு திலகங்களாக விளங்க

வசீகரிக்கும் எழிலின் மலர்ச்சியில்
யாவரையும் மயக்குமுறச் செய்யுங்கள்.
நேர்த்தியாக சருமத்தை பரிசுத்தம் செய்து,
பவுடரை உபயோகிக்க சிறந்த ஆதார
மாக உதவும் "'ஹாஸலீன்' ஸ்னோ"
வினால் எப்பொழுதும் குளிர்மையுடனும்,
புத்துணர்ச்சியுடனும் இருங்கள்.




## "'HAZELINE' SNOW"

(TRADE MARK)

"'ஹாஸலீன்' ஸ்னோ" (டிரேட் மார்க்)



பர்ரோஸ் வெல்கம் & கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.
பி. ஓ. பாக்ஸ் 290, பம்பாய்



# கலையும் அருளும்

க. பஞ்சாபகேசன்

வாசல் திண்ணையில் வழு வழுப்பான சிமிட்டித் தின்டு போடப் பட்டிருந்தது. எந்த மயன் அந்தத் தின்டைச் சிருஷ்டி செய்திருந்தானோ, அதன் வழு வழுப்பும் நேர்த்தியான உருண்டை வடிவமும் சீதாபதி நாயக்கர் சாய்ந்து கொள்ளக் கன கச்சிதமாக அமைந்திருந்தது.

சம்பிரமமாய்ச் சாப்பிட்டு விட்டு வாசல் திண்ணைத் தின்டில் வந்து சாய்ந்து கொண்டிருந்தார் சீதாபதி. எட்டு முழம் நாராயண வரம் கைத்தறி வேஷ்டியும் மேலே வெற்று மேனியில் பச்சைப் பட்டைக் கரைத் துண்டும் போட்டிருந்தார். கட்டுக் குடுமியில் அங்கங்கே நரை இலேசாக ஓடியிருந்தது; ஆனாலும் வயசு அதிகம் ஆனவரைப்போல் சீதாபதி தென்படவில்லை; இருந்தாலும் அவருக்கு நாற்பது வயது நடந்து கொண்டிருந்தது.

சற்றுத் தூரத்தில், எதிர்த் திண்ணையில் அமர்ந்திருந்த திருவரங்க நாயக்கரிடம் அப்போது உரையாடிக் கொண்டிருந்தார் சீதாபதி.

"திருவரங்கநாதா! பெரியாழ்வார் பாசுரங்களுக்காகவே வாரா வாரம் ஒரு வகுப்பு நடத்தலாம் என்றிருக்கிறேன் நான். நீ என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டார் சீதாபதி.

எதிரே தூணோடு தூணாய் ஒண்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த திருவரங்க நாதர், "அவசியம் செய்யவேண்டிய காரியம். அதற்கு யாரை ஏற்பாடு பண்ண இருக்கிறீர்கள்?" என்று கேட்டார். கேள்வியைக் கேள்வியாகவே கேட்கவில்லை அவர்; ஏதோ ஒரு கேள்விக்கு அடக்கமான ரீதியில் பதில் சொல்லுகிற பய்விசயம்தான் அவர் குரலில் இருந்தது.

பின்னே இருக்காதா? கிராமத்துப் பிரதம மிராசும் முனிசீபும் உள்ளூர்ப் பெருமான் கோயில் டிரஸ்டியுமான சீதாபதி நாயக்கரிடம் தலை நிமிர்ந்து பேசிவிட அவருக்கு மட்டுமென்ன, யாருக்குமே முடியாத காரியந்தான். ஆம்! அவருக்கு அந்தக் கிராமத்தில் அவ்வளவு செல்வாக்கு இருந்தது.

"ஏன், தஞ்சாவூர் ஹைஸ்கூலில் இருக்கும் தமிழ்ப் பண்டிதர் ரகுராமனையே ஞாயிற்றுக் கிழமைகளிலும் மற்ற விடுமுறை நாட்களிலும் நம் கிராமத்துக்கு வந்து பெரியாழ்வார் பாசுரங்களைப் பாடம் சொல்லச் சொன்னால் என்ன?" என்று கேட்டார் சீதாபதி.

"நல்ல யோசனை. அப்படியே செய்யலாம். ரகுராமன் இளம் பிள்ளையானாலும் நன்றாகப் படித்தவன். நாகரிகம் என்ற பெயரில் கண்ணை மூடிக்கொண்டு பிரமையில் ஆழ்பவன் இல்லை என்று கேள்விப் பட்டிருக்கிறேன். நல்ல பக்திமான் என்று கூடக் கேள்வி..."

"நீர் இன்று மாலை புறப்பட்டுத் தஞ்சாவூருக்குப் போய் அந்தப் பிள்ளையாண்டானைப் பார்த்து ஏற்பாடு செய்துவிட்டு வருகிறீரா? இல்லை, நானே..."

"அடாடா! இந்தக் காரியத்துக்கு நீங்கள் ஏன் போக வேண்டும்? நானே போகிறேன். வருகிற ஞாயிற்றுக்கிழமையே முதல் வகுப்புக்கு அங்குரார்ப்பணம் பண்ணி விடலாமா?..."

"ஓ, அப்படியே செய்தால் போயிற்று. நான் நாளைக் காலையிலேயே பஞ்சாயத்துக் கூட்டித் தெரிவித்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டு, சீதாபதி உள்ளே போனார்.

காவேரி அன்னையின் பிரதம குழந்தைகளுள் நடாறும் ஒன்று. அந்த நடாற்றங் கரையில் அமைந்திருந்த பூவையூர் அழ

கான ஊர். பூவையூருக்கும் தஞ்சாவூருக்கும் இடையில் சுமார் ஆறு மைல்கள் தான் இருக்கும். பூவையூரை யொட்டிய ரெயில்வே ஸ்டேஷன் திட்டை. இருப்புப் பாதை நடாற்றைக் கடக்கும் இடத்தில், பாலத்தின் ஓரத்தில் இருந்தது பூவையூர்.

அழகு எப்போதுமே அடக்கத்தில் வாழ்கிறது, பிரகாசிக்கிறது என்று சொல்லுவார்கள். பூவையூர் இதற்கு ஓர் உதாரணமாகவே பிறந்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

சிறு கிராமம்தான். இரு பிரதம வீதிகளும், கிராமத்தை யொட்டி ஆற்றங்கரைக்கு அப்பாலிருந்த வயல் வெளிகளின் நட்ட நடுவில் இருந்த சேரியும் சேர்ந்த கிராமம்தான். இரு பிரதம வீதிகளிலும் அதிக பட்சம் வேளாளர் குடும்பங்கள்தாம் வசித்து வந்தன. பெரிதும் சிறிதுமான மிராசுகள் அதிகம்; இரண்டு மூன்று பட்டாமணியம் இருந்தார்கள்; சுற்றியுமிருந்த நாலு ஊர் வட்டம் கணக்குப் பிள்ளைகளும் பூவையூரில்தான் வசித்து வந்தார்கள். இவை எல்லாவற்றிற்கும் மேல் ஒரு முக்கியமான செய்தி பூவையூரின் சிறப்புக்கு அத்தாட்சியாகவும் உரைகல்லாகவும் அமைந்து விளங்கிற்று.

அதுதான், பரம்பரை பரம்பரையாக அந்த ஊரில் வசித்து வந்த ஸ்தபதிகள் குடும்பம். கோயில் கோபுரங்களுக்கு ஆசாரம் வழுவாமல் பொம்மைகள் அமைத்து வர்ணம் தீட்டுவதிலிருந்து, நவீன மோஸ்தரில் பொம்மைகளை வார்ப்பது வரையில் சகல கலை அழகுகளையும் தனக்கே உரிய அடக்கத்துடன் செய்து வந்தது அந்த ஸ்தபதிக் குடும்பம்.

பூவையூரின் சிறப்புக்கு இன்னும் இரண்டு பேர் காரணமாயிருந்தார்கள். ஒருவர், ஊரின் பிரதம வீதியை எப்போதும் தம்முடைய அருள் நோக்கால் பரிபாலித்துக் கொண்டிருக்கும் வரதராஜப் பெருமாள்; மற்றவர், அந்தப் பெருமாளின் சேவடியில் என்றென்றும் தம் சென்னி சேர்த்துப் புளகாங்கிதம் அடைந்து கொண்டிருக்கும் சீதாபதி நாயக்கர்.

ஸ்தபதிகள் தங்கள் பெருமான் கோயிலின் அழகை எப்படிப் பிரகாசம் பொருந்தியதாக வைத்திருந்தார்கள் என்பதைச் சொல்லில் சொல்ல முடியாது. சின்னக் கோயில்தான்; சின்னக் கோபுரம்தான். ஆனால் மனிதரின் உள்ளத்துள் பெரிய ஆசாரவாசலையல்லவா திறந்து வைத்தது அக் கோயில்!

அப்படிப்பட்ட கோயிலுக்கு டிரஸ்டியாக இருப்பதில் சீதாபதி நாயக்கருக்குப் பெருமை இல்லாமலா இருக்கும்? இதற்குரிய தகுதிகள் அவரிடம் அனந்தமாக இருந்தன. ஊரில் பிரதம மிராசுதார். முப்பது வேலி நிலத்துக்கும் மேலே வைத்து ஆண்டு கொண்டிருந்தார்.

செண்பகவல்லி, சீதாபதி நாயக்கரின் ஒரே மகள். செவ்வந்திப் பூவின் நிறத்தை யொத்தவள் செண்பகவல்லி. கவலை சற்றும் அணுகாத மனத்துடன் வளர்ந்தவளாதலால் அவளுடைய அங்க லாவண்யம் நேர்த்தியாகப் பரிணமித்திருந்ததில் சிறிதும் வியப்பில்லை.

ஒரு நாள் சாயங்காலம் நடாற்றுக்குத் தன் தோழிமார் இருவருடன் போனாள் செண்பகவல்லி. இடுப்பில் குடம்; இன்னொரு கையில் ஒரு சிறிய பை.

ஆகா! மாலை மெதுவாய் அந்தியை அணைத்து சூழ்ந்து வரும் இருட்டுக்கு முகமன் கூறும் அந்த வேளைதான் எத்தனை மனோகரமாயிருந்தது! மெதுவாகப் பிறையான வெள்ளை நிலா வானத்தை மூடி விரிந்து பறந்து கொண்டு வந்தது; சூழ்ந்து வந்த இருட்டுக்கு இது மிகவும் சங்கடமாகத்தான் இருந்தது.

மாயவரத்திலிருந்து வந்த ரயில் வண்டி 'ஊ'வென்று திட்டை ஸ்டேஷனில் ஊதிக் கொண்டே தஞ்சாவூருக்குப் புறப்பட்டது அவர்கள் காதுகளில் விழுந்தது.

“செண்பகம்! நேரமாகி விட்டது. புடவையைச் சீக்கிரமாக அலசு. இருட்டிக் கிட்டு வருது...” என்றாள் ஒருத்தி.

திடீரென்று செண்பகவல்லி கிறீச்சிட்டாள். “அதோ, அதோ! புடவை



தண்ணியில் அடிச்சுக்கிட்டு ஓடுதே!" என்று கத்தினாள்.

ஆமாம். தஞ்சையில் கலைப் பொருள் காட்சியில் தன் கண்களுக்குப் பெருவிருந்தளித்ததால் மனமொப்பி அவள் வாங்கியிருந்த புடவை, கையிலிருந்து நழுவி நீரில் அப்பால் போய்க் கொண்டிருந்தது.

"பெரிய சுழலாச்சே! எப்படி அதை இழுக்கிறது?"—ஒருத்தி.

"போனால் போகிறது"—இன்னொருத்தி.

"சேச்சே! இப்போதுதானே புதுசு வாங்கினேன். அதுவும் எத்தனை ஆசையாக!" என்று தவித்தாள் செண்பகவல்லி.

புடவை நீரின் மட்டத்தில் பரம அலட்சியத்துடன், ஆனால் வெகு சுகமாக, மிதந்து கொண்டே இருப்புப் பாதைப் பாலத்து அடியை நோக்கிப் போய்க்கொண்டிருந்தது.

அதே சமயத்தில் பாலத்தின் மேல் கையில் பெட்டியுடன் ஓர் உருவம் வந்து கொண்டிருந்தது. சற்று நேரத்துக்கு முன்பு திட்டை ஸ்டேஷனுக்கு வந்த மாயவரம் வண்டியில் பூவையூருக்காக வந்த பிரயாணிதான். அதிலும் வாலிபன். ஸூட்டும் சட்டையும் போட்டிருந்தான்.

கீழே பார்த்தான்.

அவன் அப்புறம் யோசிக்கவில்லை. தன் கால் பூட்ஸ்களைக் கழற்றிப் பாலத்தின் மேல் வைத்தான்; பெட்டியையும் பாலத்தின் மேல், இருப்புப் பாதை தாங்கல் தரக் கட்டையின் மேல் வைத்தான்.

அடுத்த நிமிஷம் 'தொபுகடீ'ரென்று நடு ஆற்றில் புரண்டோடும் நீரில் தைரியமாகக் குதித்து விட்டான்.

படித்துறையில் நின்று கொண்டிருந்த பெண்கள் விதிர் விதிர்த்தவராய் இந்தக் காட்சியைப் பார்த்தபடி பேசுவதறியாது நின்று கொண்டிருந்தார்கள். 'தண்ணீருக்குள் குதித்தவன் ஒரு கணத்துக்கு மேல் எழும்பி வரவேயில்லை. 'குபுக் குபுக்' கென்று நீரில் இரண்டு மூன்று குமிழிகள் மட்டும் தோன்றின.

அப்புறம், ஆகா, எத்தனை லாகவத்துடன் அவன் நீந்தினான்! புடவையைப் பந்து போல் ஒரு கையில் சுற்றிக்



கொண்டு இரண்டு நிமிஷங்களில் படித்துறையை வந்தடைந்தான்.

முகத்தில் வழிந்திருந்த நீரைத் துடைத்து விட்டுக் கொண்டு, "இது யாருடையது?" என்றான். அவன் கண்ணுக்கெதிரே செண்பகவல்லி புன்னகை பூத்து நின்றாள். அவன் கேள்விக்குப் பதிலாய் ஓரடி முன் வந்து, நாணத்துடன் தலை குனிந்தவாறே புடவையை வாங்கிக் கொண்டாள்.

"இவ்வளவு அஜாக்கிரதை கூடாது..." என்று மட்டும் சொல்லிவிட்டு, கரையின் மேலேறப் போனான் அவன்.

"நீங்கள்..." என்று நாணிக்கொண்டே கேட்டாள் செண்பகவல்லி.

"இங்கே பூவையூருக்குத்தான் இந்தச் சாயங்கால வண்டியில் வந்தேன். ஷண்முகநாத ஸ்தபதியின் குமாரன் நான். வருகிறேன், அம்மா!" என்று அவன் சொல்லி விட்டு, செண்பகவல்லியின் மற்ற இரு தோழிகளையும் குறிப்பாகப் பார்த்துவிட்டு அங்கிருந்து போய் விட்டான்.

இந்தச் சம்பவம் நடந்து ஐந்தாறு நாட்கள் ஓடிய தினுசில் ஸ்தபதி மகன் மேகநாதனுக்கும் செண்பகவல்லிக்கும் இந்த உலகம் சுவர்க்கமாக மாறியிருந்தது என்று சொல்ல வேண்டும்.

கோயிலுக்கு அவள் போகும் வேளை தெரிந்து அவன் போனான். பெருமாளைச் சேவித்த பிறகு ஒருவரையொருவர் பார்த்து அவர்கள் புன்னகை புரிந்து கொள்ளுவார்கள். கடை வீதிக்குச் செண்பகவல்லி வரும்போதெல்லாம் மேகநாதனும் அங்கே நடமாடிக் கொண்டிருப்பான்.

இதற்குப் பிறகு ஒரு நாள் ஷண்முகநாத ஸ்தபதியின் தொழிற்கூட வாயிலில் பகல் வேளையில் வந்து நின்றாள் செண்பகவல்லி, தனியாக!

ஸ்தபதிக்குப் பேராச்சரியமாக இருந்தது.

ஷண்முகநாத ஸ்தபதியின் பின்னே நின்று கொண்டிருந்த மேகநாதனைப் பார்த்துத் தன் இயல்பான புன்னகையைப் புரிந்து விட்டுச் செண்பகவல்லி ஸ்தபதியிடம் திரும்பி, "எனக்கு அழகானதொரு கிருஷ்ண விக்கிரகம் வேண்டும்!" என்றாள்.

"நிறைய விக்கிரகங்கள் இருக்கின்றன. உனக்குப் பிடித்ததை எடுத்துப் போயேன்" என்று சொல்லிக் கொண்டே ஸ்தபதி உள்ளே போனார்.

"நாளைக்கு என் அப்பா பெரியாழ்வார் பாசுர வகுப்பு நடத்த ஏற்பாடு செய்திருக்

கிறார். வகுப்புகளில் வைக்க நல்ல கிருஷ்ண விக்கிரகம் வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தார். 'நானே போய் நம் ஸ்தபதியிட மிருந்து வாங்கி வருகிறேன்' என்று சொல்லி விட்டு இங்கே ஓடி வந்தேன்........." என்றாள் செண்பகவல்லி மேகநாதனைப் பார்த்து.

"இது வெறும் சாக்குத்தானே?" என்றான் மேகநாதன்.

"சாக்கோ, சாக்கில்லையோ, இந்தக் கிருஷ்ண விக்கிரகம் என் எண்ணங்களை..."

"கண்டிப்பாய் நிறைவேற்றி வைக்கும்..." என்று முடித்தான் மேகநாதன்.

அதே சமயம் அழகானதொரு கிருஷ்ண விக்கிரகத்துடன் அங்கே வந்தார் ஸ்தபதி.

குடும்பத்துக்குக் கௌரவம் அளிக்கும் கலையைக் கற்காமல் அவரது மகன் பள்ளிப் படிப்பு, கல்லூரிப் படிப்பு என்று போவது அவருக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும் ஒரே புதல்வனை அவனது ஆசையைக் கெடுக்க அவருக்கு மனமில்லை. ஆயினும் சமயம் வாய்க்கும் பொழுதெல்லாம் அவனிடம் சொல்லாமல் இருப்பதில்லை. செண்பகவல்லியிடம் கிருஷ்ண விக்கிரஹத்தைக் கொடுக்கும் பொழுதும், தம் எண்ணத்தை அவர் தெரிவிக்கத் தவறவில்லை. ஆனால் அவன்தான் அதைச் சரியாகக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

சீதாபதி நாயக்கர் தம்முடைய வாழைத் தோட்டங்களைப் பார்வையிட்டுக் கொண்டிருந்த போது அந்தப் பக்கமாக வந்தான் மேகநாதன். சீதாபதியைக் கண்டதும் கைகூப்பி அஞ்சலி செய்தான்.

"நீதானே பெரிய ஸ்தபதியின் பையன்?" என்று சீதாபதி கம்பீரமான குரலில் கேட்டார்.

"ஆமாம்" என்றான் மேகநாதன் மிகுந்த வினயத்துடன்.

"உன் தகப்பனாரைக் கூப்பிட்டுப் பேச வேண்டும் என்று ஐந்தாறு நாட்களாக நினைத்துக் கொண்டிருக்கிறேன். சந்தர்ப்பம் அகப்படவில்லை. பெருமாள் கோயில் கோபுரத்தின் முதல் சுற்றில் உள்ள சிற்பங்கள் பழுதுபட்டுப் போய் விட்டன. அவற்றைப் புதுப்பிக்க வேண்டும்; கோபுரத்தின் மற்றச் சிற்பங்களுக்கும் புது வர்ணம் அடிக்க வேண்டும். ஷண்முகநாதனிடம் இதையெல்லாம் தெரிவித்து உடனே என்னை வந்து பார்க்கச் சொல். தெரிகிறதா? உன் பெயர் என்ன?" என்றார் சீதாபதி.

"மேகநாதன்."

"நல்ல பெயர். மேகநாத ஸ்தபதி என்று பேர் வாங்கி, உன் பரம்பரைக் கலை செழிக்க, நீ பாடுபட வேண்டும் அப்பா!" என்று சொல்லி விட்டு அங்கிருந்து இரண்டடி எடுத்து வைத்த சீதாபதி திரும்பி, "இன்றைக்குச் சாயங்காலம் பெரியாழ்வார் பாசுர வகுப்பைக் கோயில் அலங்கார மண்டபத்தில் ஆரம்பிக்கிறோம். ஷண்முகநாதனிடம் சொல்லு!" என்று சொல்லிக் கொண்டே மேலே நடக்க ஆரம்பித்தார்.

மனம் குழம்பியவாறே மேகநாதன் தன் வீட்டுக்குப் போனான். சீதாபதி நாயக்கர் சொல்லியிருந்ததை ஞாபகமாகத் தன் தந்தையிடம் சொன்னான்.

அன்று மாலை பெருமாள் கோயில் அலங்கார மண்டபம் வெகு அழகாய்க் காட்சி தந்து கொண்டிருந்தது. மூலைக்கு மூலை மாவிலைத் தோரணங்களைக் கட்டியிருந்தார்கள்.

நல்ல கூட்டம். பத்துப் பதினைந்து பெண்டிரும் இருந்தார்கள்.

ரகுராமன், குறிக்கப்பட்டிருந்த அந்தச் சுபமான வேளையில், தன்னுடைய கணீரென்ற குரலில் வகுப்பை ஆரம்பித்தான்.

பெண்டிர் கூட்டத்தில் தன் அன்னைக்குப் பின்னால் உட்கார்ந்திருந்த செண்பகவல்லி சுற்றுமுற்றும் பார்த்தாள். ஷண்முகநாத ஸ்தபதிதான் அடக்கமாக ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தார். அவர் மகன் மேகநாதனைக் காணோம்.

செண்பகவல்லியின் உள்ளம் என்னவோ போலாகி விட்டது. அவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. கொஞ்சநேரமானதும் தன் தாயிடம், "அம்மா! எனக்கு இலேசாய்த் தலையை வலிக்கிறது. நான் வீட்டுக்குப் போகிறேன்" என்று சொல்லி விட்டுப் புறப்பட்டாள்.

அவள் வீட்டுக்குப் போக இரு வழிகள் உண்டு. மேகநாதனின் வீட்டு வழியாகவும் போகலாம். அப்படித்தான் போனாள் செண்பகவல்லி.

மாலையின் அந்தம்; அந்தி நேரம். அந்த ஸ்தபதியின் வீட்டு வாசல் கதவு திறந்திருந்தது. அந்த வாசலில் நின்று உள்ளே எட்டிப் பார்த்தாள் செண்பகவல்லி. மண் பொம்மைகளை வைத்துக் கொண்டு வேலை செய்து கொண்டிருக்கும் சிப்பந்திகள் யாரையும் அங்கே காணவில்லை. ஷண்முகநாத ஸ்தபதி வழக்கமாக வீற்றிருக்கும் உயர்ந்த பீடத்தின் மேல் மேகநாதன் சிந்தனையோடு உட்கார்ந்திருந்தான்.

"விளக்கேற்றவில்லையா?"

மதுரமான குரல் கேட்டுத் திடுக்கிட்டு நிமிர்ந்தான்.

"நீயா செண்பகம்? நீ கோயிலுக்குப் போகவில்லையா?"

"போனேன். அங்கே உங்களைக் காணவில்லை; வந்து விட்டேன்" என்றாள் செண்பகவல்லி.

அதைக் கேட்டு மேகநாதன் ஆழ்ந்ததொரு பெருமூச்சு விட்டான்.





# 'அனஸின்'

## நான்கு மருந்துகள் அடங்கியுள்ளது.

'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நாம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் —

1. கொயினு: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் பிரமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' இருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெறஎப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்.




**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

"செண்பகவல்லி! உன் மனம் எனக்குத் தெரியும். ஆனால் என்னைப் பற்றி உனக்கும் தெரியுமே. மான்யத்தால் ஜீவிக்கும் ஏழைக் கலைஞரின் மகன். உன்னுடைய அந்தஸ்துக்கும் என்னுடைய..."

அந்த வார்த்தைகளை அவன் முடிக்க விடாமல் செண்பகவல்லியின் 'கல கல' வென்ற அருவிச் சிரிப்பு அந்தக் கலைக் கூடம் முழுவதும் வியாபித்து நிறைந்தது.

"விளக்கேற்ற வில்லையா?" என்று அவன் சொல்லிக் கொண்டே ஓர் ஓரத்தில் வைக்கப் பட்டிருந்த பவர் ஹரிக்கேன் விளக்கை ஏற்றிக் கொண்டு வந்து மேகநாதன் எதிரே வைத்தான். பிறகு தீர்மானமான தொனியில் சொன்னான்:



ஏப்ரல் 8-ல் மாணவர் மன்றச் சார்பில் சென்னை நகராண்மைக் கழகக் கமிஷனர் திரு என். சங்கரன் அவர்களுக்கும், சர்க்கார் துணை மொழிபெயர்ப்பாளர் திரு பாலசுப்ரமண்யம் அவர்களுக்கும் ஒரு பாராட்டு விழா நடைபெற்றது. இந்த விழாவுக்குப் பாவலர் மயிலை சிவ. முத்து அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்பித்தார்.

"இந்த விளக்கை வைத்துக் கொண்டு சொல்லுகிறேன். வருவது வரட்டும். நான் உங்களைத்தான் மணப்பேன்..."

உணர்ச்சியால் ஸ்தபதியின் குமாரனுடைய கண்கள் ஆனந்த பாஷ்பம் சொரிந்தன. அவன் எழுந்து வந்து செண்பகவல்லியின் கரங்களைப் பற்றிக் கொண்டு சொன்னான்:

"செண்பகம்! நீ கோயிலுக்குப் போ. நான் பின்னாலேயே வருகிறேன்."

அதை கேட்டு விட்டுத் திரும்பிய மேகநாதன் மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

"மேகநாதா! இன்று ரகுராமன் சொன்ன கதையைக் கேட்டாய் அல்லவா? கலையினால் இந்த உலகத்தில் அடைய முடியாத இன்பம் எதுவுமே கிடையாது. கடவுளையே அடையலாம் என்று சொல்லும்பொழுது எனக்கு என்ன தோன்றிற்று, தெரியுமா? நீயும் உன் கல்லூரிப் படிப்பையெல்லாம் விட்டு விட்டுக் கைதேர்ந்த ஸ்தபதியாக வேண்டும்; உன்னை உலகம் புகழ வேண்டும்! இதுதான் என் ஆசை" என்று சொல்லிவிட்டு ஷண்முகநாதன் உள்ளே சென்று விட்டார்.

அவர் பேச்சுப் பிடிக்காத மேகநாதன் எழுந்து கால் போன திக்கில் நடக்க ஆரம்பித்து விட்டான். நேரே ஆற்றின் படித்துறையை வந்தடைந்தான். என்ன ஆச்சரியம்! அங்கே செண்பகவல்லி நின்று கொண்டிருந்தாள்!

அருகில் யாருமில்லை என்பதாக அவர்களுக்கு எண்ணம். சுற்றுப்புறத்தைப் பற்றிய அலட்சியம்தானே உண்மைக் காதலுக் குரிய பரம லட்சணம்?

"நீயா, செண்பகம்?"

"நீங்களா?"

படித்துறையின் மேல் படியிலிருந்து, "செண்பகவல்லீ...!" என்று அவள் தோழி பொருத்தியின் குரல் கேட்டது.

"நான் வருகிறேன். அப்புறம் பார்க்கலாம். சரிதானே?" என்று சொல்லிவிட்டு அங்கே யிருந்து அவசரம் அவசரமாய்ச் செண்பகவல்லி புறப்பட்டாள். அவள் படித்துறையின் கடைசிப் படியை மிதித்திருப்பாள். எதிரே வந்தார் திருவரங்கநாதர். அவளை முறைத்துக் கொண்டுதான் படிகளில் இறங்கி வந்தார் அவர்.

நீர் மட்டத்தில் நின்று கொண்டிருந்த மேகநாதன் அருகில் வந்து நின்று கொண்டார் திருவரங்கநாதர்.

"மேகநாதன் அவர்களே! இந்த நாடகத்தைக் கொஞ்ச நாட்களாகவே நான் கவனித்து வருகிறேன்" என்று ஹூங்காரம் செய்தார் திருவரங்கநாதர்.

"உமக்குச் சம்பந்தமில்லாத விஷயத்தில் தலையிடவேண்டாம்!" என்றான் மேகநாதன்.

"என்னைச் சாதாரணம் என்று நினைக்க வேண்டாம். இந்நேரம் செண்பகவல்லிக்குப் பாவம், பூசை கிடைத்துக் கொண்டிருக்கும். நான் என்ன செய்ய? விஷயத்தை முளையிலேயே கிள்ளி எறிய வேண்டாமா?"

என்ன! செண்பகவல்லிக்கு என்ன ஆபத்து வந்து விட்டது? இந்தப் பாவி,



எலி—முதுகில் என்ன, நத்தை உட்கார்ந்திருக்கிறது?
ஆமை—அதுக்குக் கொஞ்சம் சீக்கிரமாக ஒரு இடத்துக்குப் போகணுமாம். அதுக்காக!

சீதாபதி நாயக்கரிடம் போய் என்ன வெல்லாம் கோள் சொன்னானோ? அப்புறம் மேகநாதன் அங்கே கொஞ்ச நேரம் கூட நிற்காமல் 'விடு விடு' வென்று நடந்தான்.

அப்போது நன்றாக இருட்டிவிட்டது. ஓட்டமும் நடையுமாய் வந்த மேகநாதன் தன்னை ஏதோ ஒரு சக்தி உந்த, சீதாபதி நாயக்கரின் பெரிய வீட்டை அடுத்திருந்த ஒரு காலியான பழைய வீட்டின் மாடியி லேறிச் சீதாபதி நாயக்கர் வீட்டு மாடியில் மெதுவாகக் குதித்தான். சுற்றியும் தாழ்வாரம் விடப்பட்டு, வீட்டுக் கூடம் துருத்தி விடப் பட்டிருந்தது. அதன் ஜன்னல் வழியே பார்த்தான் மேகநாதன்.

சீதாபதி நாயக்கரின் குரல் 'கணீரெ'ன்று கேட்டது:

"செண்பகம்! நீ விவரம் அறிந்த பெண். நான் உனக்குச் சொல்வதற்கு ஒன்றுமில்லை. உனக்கு இஷ்டப்பட்ட மணாளனை நீ தேர்ந்தெடுத்துக் கொள்ளுவதில் எனக்கு எந்தவிதத் தடையுமில்லை. ஆனால் இவனன்றி வேறு யாராயிருந்தாலும் சொல்லு, அம்மா. செய்து வைக்கிறேன்."

"அவரன்றி வேறெவருமில்லை, அப்பா!"

"என்ன, அம்மா, நீ சொல்லுகிறது விசித்திரமாக இருக்கிறது! கலைக் குடும்பத்தில் பிறந்தவனுக்கு அந்தக் கலையைப் பற்றிய அக்கறை இல்லை. படிப்புப் படித்து இவன் என்ன குப்பை கொட்டப் போகிறான்? தன்னுடைய தந்தை ஷண்முகநாத ஸ்தபதி மாதிரி சிருஷ்டி செய்ய முடியாத அவனிடமா மனம் பறி கொடுத்து விட்டாய்?" என்று உணர்ச்சி வசத்தில் ஈடுபட்டு இரைந்து சொன்னார் சீதாபதி.

அவ்வளவுதான். அதற்கு மேல் மேகநாதனால் அங்கிருக்க முடியவில்லை. வந்த சுவடு தெரியாமல் வீதியில் இறங்கிப் படு வேகமாக நடக்க ஆரம்பித்தான்.

அன்று விடியற்காலை நாலு மணிக்கு ஷண்முகநாத ஸ்தபதி துயிலிலிருந்து விழித்துக் கலைக்கூடத்தின் பக்கம் வந்தபோது பேராச்சரிய மடைந்தார். சில மண் பொம்மைகளைச் செய்து தனக்கு முன்னே வைத்துக் கொண்டு, அவற்றுக்கு வித விதமான வர்ணங்கள் தீட்டிக் கொண்டிருந்தான் மேகநாதன்.

குழலூதும் பாவனையில் ஒரு உயரமான கிருஷ்ண விக்கிரகம்; ஒரு படர்ந்த மரத்தின் உருவம்; இரண்டு மூன்று பசுக்கள்; வாயிலிருந்து புல் சோர ஒரு மான்; தனித் தனியாகப் புள்ளினங்கள்—ஆகிய இந்தப் பொம்மைகளைத் தனித் தனியே செய்து அவைகளுக்கு வர்ண மடித்துக் கொண்டிருந்தான். இந்தப் பொம்மைகள் எல்லாவற்றையும் பொருத்த ஒரு பீடமும் ஆக்கி வைத்திருந்தான்.

அன்று மாலை கோயில் அலங்கார மண்டபத்தில், கண்கள் பனி சோர, மேகநாதன் சிருஷ்டித்திருந்த அந்தச் சிறு பொம்மைக் கொலுவின் முன்னே நின்றிருந்தார் சீதாபதி நாயக்கர்.

கண்ணன் அவர் உள்ளத்தில் குழலூதிக் கொண்டிருந்தான்.

நெடுநேரத்துக்குப் பின்பு அவர் மேகநாதனைப் பார்த்துச் சொன்னார்:

"நான் கேட்கிறேனே என்று நினைத்துக் கொள்ளாதே, அப்பா! இது நீதானே செய்தது?"

மேகநாதன் 'தடாலெ'ன்று அவர் காலடியில் வீழ்ந்தான்.

"என்னை நீங்கள் மேலும் சோதிக்காதீர்கள்! நான் மேகநாத ஸ்தபதியாகி விட்டேன்; ஸ்தபதி ஆகிவிட்டேன்!" என்று விழிநீர் சோர அலறினான்.

அவன் தோளைப் பிடித்துக் கொண்டு தூக்கி அவனை நிறுத்தினார் சீதாபதி நாயக்கர்.

"உனக்கு என் பெண்ணைக் கொடுத்து விட்டேன், அப்பா!" என்றார் அளவற்ற மகிழ்ச்சியோடு.

சற்றுத் தூரத்தில் நின்று கொண்டிருந்த செண்பகவல்லியின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தது. "கலையினால் தெய்வத்தை அடையலாம் என்பது சரி. ஆனால் அந்தக் கலையை அடையக் காதல் அல்லவா வேண்டியிருக்கிறது!" என்று ரகுராமன் கதைக்கு மேகநாதன் ஒரு மெருகு கொடுத்துக் கொண்டான்.

உண்மைதானே? செண்பகவல்லியிடம் காதல் கொள்ளா விட்டால் அவன் கல்லூரிப் படிப்பை விடுவது ஏது? கலையைக் கற்றுக் கொள்வதேது? கலைத்தேவியின் அருளைப் பெறுவதுதான் ஏது?



# தர்ம சங்கடம்

நா.ராமச்சந்திரன்

நாராயணசாமியிடமிருந்து வந்த கடிதத்தைப் பிரித்துப் படித்தவுடன் அசந்து நின்று விட்டார் கஸ்தூரி ரங்கன். அவருடைய நா உலர்ந்து விட்டது. அவர் என்ன நினைத்து அவனுக்கு முதலில் கடிதம் எழுதினார்! இவ்வளவு சீக்கிரம் காரியத்தை முடித்துவிட்டு நாராயணசாமி பதில் எழுதுவான் என்று அவர் கொஞ்சம் கூட எதிர்பார்க்கவில்லை.

வயது வந்த பெண் சரவணி வீட்டில் இருப்பதைக் காணக் காணக் கஸ்தூரிரங்கனுக்குக் கவலை பெருகிக் கொண்டுதான் வந்தது. அவர் ஏழை என்றோ கையாலாகாதவர் என்றோ சொல்லிவிட முடியாது. காவிரியாறு பாயும் பூமியில் அவருக்குக் கொஞ்சம் நஞ்சையிருந்தது. கையில் மாதாமாதம் புழங்கிக் கொள்ள வேண்டிய பணத்துக்குச் சிறிது கறிகாய்க் கொல்லை இருந்தது. இதற்குமேல் பெருமையாகச் சொல்லிக்கொள்ளப் பையன் நாராயணசாமி பட்டணத்தில் உத்தியோகம் செய்து கொண்டிருந்தான். நல்ல பிள்ளை. மாதா மாதம் கொஞ்சமாகத்தான் ஊரிலிருந்து பணம் கேட்டுக் கொண்டிருந்தான்.

சரவணிக்கு இருபது வயதிருக்கும். பார்த்தால் அவ்வளவு வயது என்று யாரும் சொல்ல மாட்டார்கள். பூஞ்சைச் சரீரம்; கொஞ்சலாக வளர்ந்திருந்தாள். ஆனால் கண்கள் மட்டும் தீட்சண்யம் பெற்று விளங்கின. ஒளி பொருந்திய அந்தக் கண்கள் அவளுக்கென்றே தனித்ததொரு சொத்தாக அமைந்திருந்தன.

சரவணிக்குக் கல்யாணம் செய்துவிட வேண்டும் என்றுதான் கஸ்தூரி ரங்கன் துடித்துக் கொண்டிருந்தார். நான்கு வருடங்களாக அவர் இதற்காகப் படும்பாடு சொல்லி முடியாது. அவருக்கோ வியாதி சரீரம். மனம் சஞ்சலம் அடைந்தால் தேகத்தில் உஷ்ணம் ஏறிவிடும். சூட்டின் வேகத்தில் பித்துப் பிடித்தவர் போல உட்கார்ந்து விடுவார். அப்புறம் ஒரு காரியம் செய்ய ஓடாது. இப்படியே நாலு வருஷங்களைக் கடத்தி விட்டார் அவர். இனியும் அப்படி இருக்க முடியுமா!

நாராயணசாமி உத்தியோகம் பண்ணப் பட்டணம் போனான். போன சூட்டோடு வீட்டுக்குக் கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தான். அம்மாவுக்கு ஒரு கடிதாசு, அப்பாவுக்கு ஒரு கடிதாசு, தங்கைக்கு ஒரு கடிதாசு, மூவருக்கும் சேர்ந்து ஒரு கடிதாசு, என்று கடிதங்கள் வரைந்து தள்ளினான். மூன்று மாதங்கள்தான் இந்த வேகம். அப்புறம் அடங்கிவிட்டது. கஸ்தூரி ரங்கன், பிள்ளைக்கு வேலை மிகுதியாயிருக்கலாம் என்று முதலில் எண்ணினார்.

ஒரு வருஷம் இப்படியே ஓடி விட்டது. சரவணிக்குக் கல்யாணம் ஆகாமல் இருப்பதும், அவரது உடல் நலக் கோளாறும், பிள்ளை குடும்பத்தில் அக்கறை காட்டாமல் இருப்பதுமாகச் சேர்ந்து அவருக்கு அசாத்தியக் கோபத்தை வருவித்து விட்டன. எனவே, ஆத்திரத்துடன் பிள்ளைக்கு ஒரு கடிதம் எழுதினார். அதில் "பட்டணத்தில் 'ஜம்'மென்று இருந்து விட்டால் உன் பொறுப்பு குறைந்து விடும் என்று நினைக்கிறாயா! சரவணிக்கு இந்த வருடமாவது கல்யாணம் செய்ய வேண்டாமா! நாம் இப்படிச் சும்மா உட்கார்ந்திருந்தால் மாப்பிள்ளை, தானாக நம்மைத் தேடிக் கொண்டு ஓடி வருவானா!" என்றெல்லாம் கடிதத்தில் கேள்விகளுக்கு மேல் கேள்விகளாகக் கேட்டிருந்தார். கடிதத்தைத் தபாலில் சேர்த்த பிறகுதான் ஏன் இப்படியெல்லாம் எழுதினோம் என்று தோன்றியது அவருக்கு. 'பாவம், சின்னப் பிள்ளை! அவனுக்கு என்ன தெரியும்!' என்று எண்ணினார்.

'சின்னப் பையனாவது, பாவமாவது! இத்தனை நாளும் கடிதம் எழுதாதவன் இதற்கா எழுதப் போகிறான்!' என்ற எண்ணமும் கூடவே தோன்றி ஆத்திரத்தை அதிகப்படுத்தியது. ஆனால் அவர் எண்ணத்துக்கு மாறாக நாராயணசாமி பொறுப்புள்ள பிள்ளையாக நடந்து கொண்டு கடிதம் எழுதினான்.

"அப்பா! என்னைப் பற்றித் தாங்கள் இவ்வளவு சிறுமையாக நினைத்துக் கொள்ளலாமா! பரீட்சைத் தாள்களில் கூட இப்படிக் கேள்விகள் கேட்பது வழக்கமில்லையே! உபாத்தியாயர் தொழிலுக்கு முழுக்குப் போட்ட பிறகும் ஏன் இப்படிக் கேள்விகளைக் கட்டிக் கொண்டு விட மாட்டேன் என்கிறீர்கள்! சரவணிக்கு இந்த வருடம் ஜாம் ஜாம் என்று கல்யாணம் நடக்கும். நீங்கள் கேட்டிருந்தீர்களே, மாப்பிள்ளை தானாக ஓடிவருவானா என்று! அப்படியே மாப்பிள்ளை அவளைத் தேடிக் கொண்டு ஓடி வருவான். அதைப் பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டாம். இங்கே என் நண்பன் ஒருவன் இருக்கிறான். அமிர்தலிங்கம் என்று பெயர். எங்கள் ஆபீஸில்தான் அவனுக்கும் வேலை. அவனிடம் நம் குடும்பத்தைப் பற்றிச் சொன்னேன். அவன் நம் சரவணியை மணக்கச் சம்மதித்துள்ளான். அவன் அடுத்த ஞாயிற்றுக்கிழமை—பெயருக்குத்தான்—பெண் பார்க்க ஊருக்கு வருவதாகச்

சொல்லியிருக்கிறான்- ஸ்டேஷனுக்குத் தவறாமல் வந்திருந்து அவனை அழைத்துப் போய்க் கல்யாணம் நிச்சயம் செய்யவும்......''

நாராயணசாமி எழுதிய கடிதத்தைப் படித்தவுடன் அயர்த்துபோய் உட்கார்ந்து விட்டார் கஸ்தூரி ரங்கன்.

"நாராயணசாமி என்ன எழுதியிருக்கிறான்!'' என்று கேட்டுக் கொண்டே ஆவலுடன் சமையலறையிலிருந்து வெளியே வந்தாள் அவர் மனைவி ரங்கம்மாள்.

"ரங்கம்! நம்ம நாராயணசாமியைப் பற்றி என்னென்னமோ நினைத்திருந்தோமே, அதெல்லாம் தப்பு! சரவணிக்கு மாப்பிள்ளை பிடித்து விட்டான்!'' என்றார் கஸ்தூரி ரங்கன்.

ரங்கம்மாள், "எனக்குத் தெரியாதா, அவனைப்பற்றி! நீங்கள்தான் அவனைக் குறை கூறிக் கொண்டிருந்தீர்கள். இப்போதாவது திருப்தி ஏற்பட்டதா......!'' என்றாள்.

"அது சரி. இப்போது தர்மசங்கடமான நிலைமை அல்லவா ஏற்பட்டு விட்டது!''

"என்ன தர்மசங்கடம்! ஒரு நாளைக் குறிப்பிட்டு எழுதுங்கள். பையன் வந்து பெண்ணைப் பார்த்துவிட்டுப் போகட்டும்......''

"அதையும் அவனே எழுதி யிருக்கிறான். அந்தப் பையன் ஞாயிற்றுக்கிழமை புறப்பட்டு வருகிறானாம்.''

"வந்துவிட்டுப் போகட்டுமே!''

"அதில்தானே சங்கடம் இருக்கிறது!''

"என்ன சங்கடம்!''

கஸ்தூரிரங்கன் மோட்டு வளையைப் பார்த்துக் கொண்டே சொன்னார்:

"சரவணி விஷயமாய்த் தோத்தாத்திரியிடம் சொல்லியிருந்தேன் அல்லவா! அவன் ஒரு இடத்தைச் சிபார்சு செய்திருந்தான். அந்தப் பையனும் ஞாயிற்றுக்கிழமைதான் வருகிறான். காலையில் தோத்தாத்திரி வந்து சொல்லிவிட்டுப் போனான். இரண்டு மாப்பிள்ளைகளும் ஒரே ரயிலில் வந்து இறங்கினால் அவர்களில் யாரை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வருவது! யாரை ரயிலடியில் விட்டுவிட்டு வருவது!''

ரங்கம்மாளுக்கும் ஒரே யோசனையாகப் போய்விட்டது. சரவணிக்கு ஒரு வரனும் குதிராமல் இருந்த காலம் போய் இப்போது மாப்பிள்ளைகள் ஒன்றுக்கு இரண்டு பேராக அல்லவா போட்டி போட்டுக் கொண்டு வருகிறார்கள்! அதிர்ஷ்டம் ஆரம்பித்தால் இப்படித்தான் போலும்!

"இப்போது இதற்கு என்ன செய்யப் போகிறீர்கள்!'' என்று தவித்தாள் ரங்கம்.

"என்ன செய்வது! ஒருவரையும் வராதே என்று சொல்ல முடியாது. தோத்தாத்திரி சொன்ன பையனை தில்லியிலிருந்து வர வேண்டும். அவன் இப்போது பாதி வழியில் இருப்பான். நாராயணசாமிக்குத் தந்தி யடித்தாலோ பொல்லாப்பு. எப்படிச் சமாளிப்பது என்றுதான் புரியவில்லை!'' என்றார் கஸ்தூரி ரங்கன் கவலையோடு.

* * *

பொல பொலவென்று விடிந்தபோது 'ஷட்டில் பாஸஞ்சர்' ஸ்டேஷனில் வந்து நின்றது. கஸ்தூரி ரங்கன் ஸ்டேஷனுக்கு வண்டியோடு வந்திருந்தார். இரண்டு மாப்பிள்ளைப் பையன்களையும் எப்படி அறிமுகப்படுத்துவது என்றெல்லாம் யோசனை செய்து கொண்டிருந்தது அவர் மனம்.

ரயில் நின்றவுடன், ஒரு பெட்டியிலிருந்து ஒரு வாலிபன் இறங்கினான். அவனுடன்கூட ஒரு வயதான பெண்மணியும் இருந்தாள். கஸ்தூரி ரங்கனுக்கு அவர்கள்தான் தம் வீடு தேடி வருபவர்கள் என்று தெரிந்து விட்டது. அவர் பக்கத்தில் போய் நின்றவுடன் பையனே, "தோத்தாத்திரி எழுதி யிருந்தார். கஸ்தூரி ரங்கன் தாங்கள்தானே!'' என்று கேட்டான்.

"ஆமாம், ஆமாம்! நான்தான். நீங்கள் தானே தில்லியிலிருந்து வருகிறீர்கள்! வாருங்





சென்ற மார்ச் மாதம் 31ல் பம்பாய் தென் இந்திய உயர் நிலைப் பள்ளியில் அதன் தலைமைத் தமிழ் ஆசிரியர் திரு நா. பிச்சுமணி ஐயர் எழுதிய "பக்த துருவன்" என்ற நாடகத்தை நடத்தினார்கள். நாடகத்துக்குப் பம்பாய் பிரபல வக்கீலான திரு நாராயண சாமி தலைமை தாங்கிச் சிறப்பித்தார். நாடகத்தில் கலந்துகொண்டு நடித்தவர்களை மேலே படத்தில் காணலாம்.

---

கள், போகலாம்!" என்று சொல்லிக் கொண்டே கஸ்தூரி ரங்கன் தலையைத் திருப்பித் திருப்பி முன் கோடியிலிருந்து பின்கோடி வரை பிளாட்பாரத்தில் தம் பார்வையைச் செலுத்தினர். வேறொருவரும் அங்கில்லை. நல்ல வேளையாக நாராயணசாமி அனுப்பிய மாப்பிள்ளைப் பையன் வரக் காணோம்!

கஸ்தூரி ரங்கனுக்கு மனத்துக்குள் சந்துஷ்டி யிருந்தாலும் நாராயணசாமியிடம் கோபம் கோபமாக வந்தது. அவன் எதற்காகக் கடிதம் எழுதவேண்டும்? அவன் அப்படி எழுதியதினால் அவர் மனம் என்ன பாடு பட்டது, தெரியுமா!

டில்லிப் பையனின் முடிவான அபிப்பிராயம் திரும்புவதற்குள் தெரிந்துவிடும் என்று எண்ணிய அவருக்கு ஏமாற்றம்தான் எஞ்சியது. பையனின் தாயார் ஊர் போய்க் கடிதமெழுதுவதாகக் கூறி மேலே சம்பாஷணையை வளர விடாமல் பார்த்துக் கொண்டாள்.

அவர்களை ரயில் ஏற்றிவிட்டுத் திரும்பிய அவரைப் பிளாட்பாரத்திலேயே ஒரு வாலிபன் சந்தித்தான். "உங்கள் பெயர்தான் கஸ்தூரி ரங்கனா!" என்று பணிவோடு கேட்டான்.

"ஆமாம், நான்தான்! என்ன வேண்டும்!" என்றார் கஸ்தூரி ரங்கன்.

"நீங்களாகத்தான் இருக்கும் என்று ஊகித்தேன். என்னை உங்கள் பிள்ளை நாராயணசாமி அனுப்பி வைத்தான். என் பெயர் அமிர்தலிங்கம். உங்களுக்குக் கூடக் கடிதமெழுதியிருப்பதாக என்னிடம் சொல்லியிருந்தான்."

கஸ்தூரி ரங்கனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. "அமிர்தலிங்கம் என்பது நீங்கள்தானா! ஆமாம், ஆமாம், எழுதியிருந்தான். காலையிலேயே உங்களை எதிர்பார்த்தேன். ஏன் நீங்கள் வரவில்லை!" என்றார் அவர்.

அமிர்தலிங்கம் இங்குமங்குமாக விழிகளைச் செலுத்தினன். அவன் ஏன் காலை ரயிலில் வரவில்லை! அதன் காரணத்தைச் சொல்லித்தான் ஆகவேண்டுமா! பாவம், அதைச் சொன்னால் ஒருவேளை கஸ்தூரி ரங்கனுக்கு மன ஆறுதல் ஏற்பட்டாலும் ஏற்படும்.

அமிர்தலிங்கம் சொன்னன்: "காலை வண்டியில் தான் நான் வந்தேன். ஆனால் எனக்கு நேராக இங்கு வரச் சௌகர்யப்படவில்லை. நான் ஏறியிருந்த பெட்டியில் ஒரு வாலிபனும் ஒரு அம்மாளும் ஏறியிருந்தார்கள். அவர்கள் பேச்சிலிருந்து அந்த வாலிபன் உங்கள் வீட்டுக்குத்தான் பெண் பார்க்க வருகிறன் என்று தெரிந்து கொண்டேன். நானும் அதற்காகத் தானே கிளம்பியிருந்தேன்! இரண்டு மாப்பிள்ளைகளும் ஏக காலத்தில் வந்து இறங்கினால் உங்கள்பாடு தர்ம சங்கடமாகிவிடும் என்று எண்ணி முன்யோசனையுடன் முன் ஸ்டேஷனிலேயே நான் இறங்கிக் கொண்டேன். அவர்கள் இன்று மாலை ரயிலில் ஊருக்குக் கிளம்பி விடுவார்கள் என்றும் எனக்குத் தெரியும்."

"நீங்கள் மன்னித்துக் கொள்ள வேண்டும். எதிர்பாராமல் இப்படி ஒன்று நேர்ந்துவிட்டது. நான் ஒரு வரனுக்கு ஏற்பாடு செய்திருந்தேன். என்னை அறியாமல் நாராயணசாமி ஒன்று ஏற்பாடு செய்து விட்டான். இரண்டும் ஒரே நாளில் அமைந்து விட்டது. நீங்கள் தப்பாக நினைத்துக் கொள்ளக் கூடாது!" என்றார் கஸ்தூரி ரங்கன்.

"இதில் தப்பு என்ன இருக்கிறது! உங்கள் பெண்ணின் யோகம், பிள்ளைகள் போட்டி போட்டுக் கொண்டு வருகிறார்கள். ஆமாம், கல்யாணம் நிச்சயமாகி விட்டதல்லவா!" என்று கேட்டான் அமிர்தலிங்கம்.

"கல்யாணம் இன்னும் நிச்சயமாகவில்லை. ஊருக்குப் போய்க் கடிதம் எழுதுவதாகச் சொல்லி விட்டுப் போயிருக்கிறார்கள்!"

"கொஞ்சமும் கவலைப்படாதீர்கள். டில்லிப் பையனுக்கே கட்டாயம் கல்யாணம்நடக்கும்!" என்று ஒரு புதிர் போட்டான் அமிர்தலிங்கம்.

டில்லிப் பையனும் அவன் தாயாரும் பேசிக் கொண்டிருந்தது முழுவதையும் அவன் கேட்டவன் அல்லவா! ஆகவேதான் அவன் அவ்வளவு தைரியமாகச் சொன்னன்.

கஸ்தூரி ரங்கன் ஆவலோடும் ஆர்வத்தோடும் அவனைத் தம் வீட்டுக்கு அழைத்தும் அவன் கண்டிப்பாக வர மறுத்துவிட்டான்.

* * *

நாராயணசாமிக்குக் கோபம் கோபமாக வந்தது. அவன் தந்தை அவனையும் அவன் ஆருயிர் நண்பனையும் அவமானம் செய்ததை அவன் எப்படிப் பொறுப்பான்!

டில்லியில் இருக்கும் மாப் பிள்ளை ஐந்நூறு சம்பாதித்தால் என்ன, ஆயிரம் சம்பாதித்தால் என்ன! அவன் அமிர்தலிங்கத் துக்குச் சமமாக ஆகி விடுவானா!

நாராயணசாமிக்கு வேலையே ஓடவில்லை. சதா அமிர்தலிங்கத் தைப் பற்றியேதான் நினைப்பு. 'அவன் தன்னைத் தவறாக எடுத் துக் கொள்ளாமல் இருக்க வேண் டுமே!' என்று எண்ணி மனம் புழுங்கினான். அமிர்தலிங்கம் எப் பொழுதும் போலத்தான் அவ னிடம் பழகினான். இருந்தாலும் தன்னோடு சரியாகப் பழக வில்லையோ என்று நாராயண சாமிக்குத் தோன்றியது.

ஒருநாள் சிற்றுண்டி நேரத்தில் நாராயணசாமியைச் சந்தித்த அமிர்தலிங்கம், "ஏன், நாராயணசாமி! இன் னும் கல்யாணப் பத்திரிகையைக் காணோமே! கல்யாணத்தைக் காலா காலத்தில் முடிக்காமல் என்ன அப்பா இது!" என்றான்.



"இந்த நெருப்பு அணைக்கும் மோட்டார்கள் எங்கே போகிறதோ, தெரியவில்லையே!"

"பசங்கள் எல்லாரும் பரீட்சைதான் ரொம்பச் சுலபமாக இருக்கிறது என்று 'கொளுத்து, கொளுத்து' என்று கொளுத்துகிறார்களாம். ஒருவேளை அங்குதான் போகிறதோ என்னவோ!"

நாராயணசாமிக்கு என்ன பதில் சொல்வது என்று புரியவில்லை.

"கல்யாணத்துக்கு என்னைக் கட்டாயம் உன்னுடன் அழைத்துக் கொண்டு போ, உன்னை மைத்துனன் ஆக்கிக் கொள்ளும் பாக் கியம்தான் எனக்குக் கிட்டவில்லை. சிநேகித னாகவாவது இருக்கலாம் அல்லவா!" என்று கூறினான் அமிர்தலிங்கம்.

அமிர்தலிங்கத்தின் சொற்களில்தான் எத் தனை ஆதுரம்! இனி அவன் என்ன செய்ய முடியும்! காரியமோ கை மிஞ்சி விட்டது!

அன்றிரவு அறைக்குத் திரும்பியபோது அவனை ஒரு கடிதம் வரவேற்றது.

அவன் அப்பா எழுதியிருந்தார். சரவணிக்குக் கல்யாணம் நிச்சயமாகவில்லை என்றும், டில்லியி லிருந்து வந்தவர்கள் பிடி கொடுக்காமல் பதில் எழுதிவிட்டார்கள் என்றும், அமிர்தலிங்கத்தை அனுப்பி வைக்குமாறும் எழுதியிருந்தார்.

கடிதத்தைப் படித்தவுடன் எரிச்சல் எரிச்ச லாக வந்தது நாராயணசாமிக்கு. 'இந்த அப்பாவுக்கு இதுவும் வேண்டும், இன்னமும் வேண்டும். என் சிநேகிதனைத் துச்சமாக அல் லவா மதித்து விட்டார்...' என்று தனக்குள் ளேயே கருவிக் கொண்டான். இப்போது அமிர்தலிங்கத்தை அனுப்புவது என்றால் அது இலேசான காரியமா! 'டில்லியில்லை என்றால் பம் பாய் இருக்கவே இருக்கிறது!' என்று அவன் கேலி செய்தால் கூட ஆச்சரியப்படுவதற் கில்லை. இப்போது அவன் இருக்கும் மன நிலையில் கட்டாயம் சரவணியைக் கல்யாணம் செய்து கொள்ளத் தன்னுடைய சம்மதம் கொடுக்கவே மாட்டான்!

இப்படி நாராயணசாமியாகவே முடிவு கட்டிக் கொண்டான். "கல்யாணப் பத்திரிகை வந்து விட்டதா! டில்லிப் பையன் என்ன சொன்னான்!" என்று தினமும் நாராயண சாமியைக் கேட்டுக் கொண்டிருந்தான் அமிர்த லிங்கம். நாராயணசாமி இதோ அதோ என்று ஏதாவது சாக்குச் சொல்லிக் கொண்டே இருந்தான். உண்மையை எடுத்துக் கூற அவனால் முடியவில்லை. 'அமிர்தலிங்கம், நீதான் என் தங்கையைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்" என்று சொல்ல அவனுக்கு நா எழவில்லை. முகத்தில் அடிப்பதுபோல அமிர்த லிங்கம் ஏதாவது பதில் சொல்லிவிட்டால் அவ மானப்பட வேண்டியல்லவா வரும்!

"நாராயணசாமி! நான் இப்போது பெண் பார்க்க ஊருக்குப் போகிறேன். திரும்பி வர ஒரு வாரம் ஆகும். நீ உன் தங்கையின் கல்யாணச் சாப்பாடு போடுவதற்கு முன்னால் நானே உனக்குக் கல்யாணச் சாப்பாடு போட்டு விடுவேன் என்று நினைக்கிறேன்!" என்று சொல்லி அமிர்தலிங்கம் அவனிடம் ஒருநாள் வெளியூர் போக விடைபெற்றுக் கொண்டான்.

நாராயணசாமிக்கு எப்படியாவது உண்மையை அமிர்தலிங்கத்தினிடம் கூறிவிட வேண்டும் என்று ஆவல். அவன் சொன்னால் அமிர்தலிங்கம் ஒருவேளை ஒத்துக் கொண்டாலும் ஒத்துக் கொள்ளலாம் அல்லவா! ஆனால் விஷயத்தை விண்டு கூற நாராயணசாமியால் முடியவில்லை. பேச வாயெடுக்கும் முன்பே ஏதோ ஒரு உணர்ச்சி வந்து தடை செய்தது.

ஒரு வாரம் கழித்துத் திரும்பி வந்த அமிர்தலிங்கம், "நாராயணசாமி! உன் தங்கையின் கல்யாணத்துக்கு இன்னும் தேதி வைக்கவில்லையா!" என்று கேட்டான்.

நாராயணசாமிக்குத் துக்கம் துக்கமாக வந்தது. கண்களில் நீர் வராத தோஷம்தான். இனியும் தன் விஷயத்தை மறைத்து வைத்துக் கொள்ள முடியாது என்ற நிலை ஏற்பட்டு விட்டது. அமிர்தலிங்கத்தைத் தனக்கு எப்படியும் உதவி செய்துதான் ஆகவேண்டும் என்று கேட்பதென்று நாராயணசாமி முடிவு செய்து விட்டான்.

அதற்குள்ளாக அமிர்தலிங்கம், "நீதான் பத்திரிகை கொடுக்கவில்லை. இந்தா! என் கல்யாணப் பத்திரிகை......" என்று கூறி மஞ்சள் நிறக் காகிதத்தை நாராயணசாமியிடம் நீட்டினான்.

நாராயணசாமிக்கு உலகமே இருண்டது. சமாளித்துக்கொண்டு பத்திரிகையைப் பிரித்தவன் அசந்தே போய்விட்டான். சிரஞ்சீவி அமிர்தலிங்கத்துக்கும் சௌபாக்கியவதி சரவணிக்கும் கல்யாணம் என்று கல்யாணப் பத்திரிகை கூறிற்று.

"அமிர்தலிங்கம்! இதெல்லாம் என்ன! எனக்கு ஒன்றுமே புரியவில்லையே!" என்று ஆச்சரியத்தோடு கேட்டான் நாராயணசாமி.

"எப்படியப்பா உனக்குப் புரியும்! உன் அப்பா எழுதிய கடிதங்களையெல்லாம் தான் நீ பேசாமல் எனக்குக் காட்டாமல் அடுக்கி வைத்துக் கொண்டிருந்தாயே, அதற்காக நான் அல்லவா காரியங்கள் செய்ய வேண்டியிருந்தது......!"

"என்ன நீ செய்தாய்......!"

"ஆமாம். அகஸ்மாத்தாக உன் தந்தை உனக்கு எழுதிய கடிதத்தை ஒருநாள் நான் பார்த்து விட்டேன். அதிலிருந்து இல்லிப் பையன் கைவிட்டு விட்டான் என்று தெரிந்து கொண்டேன். உன் தந்தை என்னைப் பற்றிக் கடிதத்தில் பிரஸ்தாபித்திருந்தார். நீயோ என்னிடம் ஒன்றும் சொல்லாமல் இருந்தாய். நீ சொல்லாவிட்டால் என்ன! நானே ஊருக்குச் சென்று காரியத்தை முடித்துக் கொண்டு வந்து விட்டேன். அடுத்த வாரம் கல்யாணம். நீ வராமல் இருந்துவிடாதே..." என்று கூறிப் பலமாகச் சிரித்தான் அமிர்தலிங்கம்.

நாராயணசாமிக்கு வாயடைத்துப் போய் விட்டது. அமிர்தலிங்கத்தைப்போல அவனுக்கு நண்பர்கள் கிடைப்பார்களா! அவன் செய்த உதவிக்காக அவனை எவ்வளவு வேண்டுமானாலும் பாராட்டலாம்......ஆனால் அதற்குப் பாராட்டு வார்த்தைகள் தான் நாராயணசாமிக்குக் கிடைக்கவில்லை.

## கால்நடை இலாகா தலைவர்



கால் நடைச் செல்வம் எவ்வளவுக்கு எவ்வளவு வளருகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு நாட்டின் நிலை உயரும் என்பதை எல்லாரும் அறிவர். இந்தக் கால் நடைச் செல்வத்தின் வளர்ச்சிக்காகக் "கால் நடை இலாகா" ஒன்று சிறந்த முறையில் சேவை செய்து வருகிறது. ஆனால் முன்பெல்லாம் பெரும்பாலும் அதன் தலைவர்கள் நம் நாட்டைச் சேர்ந்தவர்களாகவே இருப்பதில்லை. இப்போது நிலைமை மாறிவிட்டது. நமது நாட்டைச் சேர்ந்தவர்களே கால் நடை இலாகாவின் தலைமைப் பொறுப்பை ஏற்கும் பாக்கியம் கிடைத்திருக்கிறது. கால் நடை இலாகாவின் தலைவராகத் திரு டி. பட்டாபிராமப் பிள்ளை அவர்கள் நியமிக்கப் பட்டிருக்கிறார். திரு பட்டாபிராமப் பிள்ளை கால்நடைகள் வளர்ச்சியில் அபார ஊக்கம் உள்ளவர். நீண்டநாளாக இந்தத் துறையில் இருந்து அனுபவம் பெற்றவர். அவருடைய தலைமையில் கால்நடை இலாகா சிறந்த சேவை செய்து, கால்நடைச் செல்வத்தை வளர்ப்பதற்குப் பாடுபடும் என்று எதிர்பார்க்கிறோம்.

# எல்லோருக்கும் தெரியும்—

காற்றுப் புகாமல் நன்றாக
பாக் செய்யப் படுவதால்
**ப்ரூக் பாண்ட் தேயிலை**
களங்கமற்று மெத்தவும்
சுத்தமாக உங்களுக்குக்
கிடைக்கிறது

நீங்கள்
செலவழிக்கும் பணத்திற்கு
**ப்ரூக் பாண்ட் தேயிலை**
அதிகப்படியான, ருசியான
தேநீரை அளிக்கிறது

ஒவ்வொரு
நாளும் 24,90,496
**ப்ரூக் பாண்ட் தேயிலை**
பாக்கெட்டுகள் வாங்
கப்படுகின்றன

**ஆகையால்தான்
மற்றெந்தத்
தேயிலையையும்
விட அதிகப்படியான
ஜனங்கள்**

# ப்ரூக் பாண்ட் தேயிலையையே

***அருந்துகிறார்கள் !***

# வட்டமேஜை

## போக்குவரத்து வசதி

இந்தியாவுக்கும் பர்மாவுக்குமிடையே சரித்திர காலம் தொட்டுத் தொடர்பு இருந்து வந்துள்ளது. இரு தேசங்களுக்குமிடையே இந்திய மக்கள் ஆரம்பத்தில் மரக்கலங்கள் மூலமும் பின்னர் கப்பல்கள் மூலமும் வாலாயமாகப் போய் வந்து கொண்டிருந்தனர். அடிமை ஆட்சி மாறி நாடு சுதந்திரமடைந்தும் கல்கத்தா-இரங்கோன் கப்பல் போக்குவரத்தைப் பிரிட்டிஷாருக்குச் சொந்தமான பி. ஐ. எஸ். என். கம்பெனியாரும், சென்னை-இரங்கோன் கப்பல் போக்குவரத்தை இந்தியர்களுக்குச் சொந்தமான ஸிந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியாரும் ஓர் ஒப்பந்தத்தின் மூலம் மேற்கொண்டனர். சுமார் நூறு வருடகாலம் வரை இப் போக்குவரத்துக்கள் எவ்விதக் குறையுமின்றி நடைபெற்றன. கல்கத்தா-இரங்கோன் கப்பல் போக்குவரத்து பி. ஐ. எஸ். என். கம்பெனியாரால் இப்பொழுதும் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. ஆனால் சென்னை – இரங்கோன் கப்பல் போக்குவரத்து திடீரெனச் சென்ற வருடம் மே மாதம் இறுதி முதற்கொண்டு நிறுத்தி விடப்பட்டது.

இதன் பயனாகச் சென்னையிலும், இரங்கோனிலும் பெருத்த கிளர்ச்சி ஏற்பட்டது. அச்சமயம் சென்னையில் தங்கி இருந்த இரங்கோன் "ரஸிகரஞ்சனி" பத்திரிகையின் அதிபர் திரு கே. எஸ். பொன்னய்யா பிள்ளை அவர்கள் மத்திய சர்க்காரின் மந்திரி ஸ்ரீ ஓ. வி. அளகேசன் அவர்களைக் கண்டு முறையிட்டதின் பேரில் ஸிந்தியா கம்பெனியார் மேற்குக் கடலோர மார்க்கத்தில் சரக்கு ஏற்றிப் போய் வந்து கொண்டிருந்த "சோனாவதி" எனும் கப்பலைச் சென்ற வருடம் ஆகஸ்ட் மாதத்தில் இரங்கோன் – சென்னை போக்குவரத்துக்கு அனுப்பி வைத்தனர். கால் நடைகள்கூடப் போய் வரமுடியாத, பார்க்க அவலட்சணமான இந்தக் கப்பலில் பிரயாணிகள் போய் வர ஆரம்பித்தனர். ஒன்றும் இல்லாததற்கு இதுவாவது கிடைத்ததே என்ற காரணத்தால் மக்கள் அதிக கஷ்ட நஷ்டமடைந்து, இக் கப்பலில் போய் வந்து கொண்டிருந்தனர். இக்கப்பல் போக்குவரத்தும் திடீரெனச் சென்ற அக்டோபர் மாதம் முதற் கொண்டு நிறுத்தி விடப்பட்டது.

பர்மா சர்க்காரின் தற்போதைய அயல் நாட்டுச் செலாவணி கட்டுப்பாட்டின்படி பிரயாணி ஒருவர் பர்மாவிலிருந்து 270 ரூபாய்க்கு மேல் எடுத்துச் செல்ல முடியாது. இன்றைய நிலையில் பர்மாவில் வசிக்கும் சுமார் 7 லட்சம் இந்தியர்களில் சரி பாதிப்பேர் தென்னாட்டைச் சேர்ந்தவர்கள். இதில் மூன்றில் இரண்டு பங்குப் பேர் தமிழர்களெனச் சொல்லலாம். இவர்களில் 100-க்கு 80 சத விகிதப் பேர் அன்றாடம் ஜீவனம் செய்து பிழைப்பவர்கள். இதில் இவர்கள் சிறிது சேமித்து அதைத் தாய் நாட்டுக்குக் கொண்டு வருவார்கள். சென்னை-இரங்கோன் நேரடி கப்பல் போக்குவரத்து நின்றதின் காரணமாகக் கல்கத்தா மார்க்கம் புறப்பட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சென்ற வருடம் டிசம்பர் மாதம் தென் ஜில்லாக்களில் புயலும், வெள்ளமும் ஏற்பட்ட சமயம் பர்மாவிலிருந்து உதவிக்குப் புறப்பட விரும்பியவர்கள் பட்ட அவஸ்தை சொல்லத் தரமன்று.

இப்பிரச்னை சென்னை சர்க்காரின் முதன் மந்திரியிடமும் நேரில் கூறப்பட்டது. இவர் மத்திய சர்க்கார்மீது பாரத்தைச் சுமத்தி விட்டார். கடிதம் மூலம் மத்திய சர்க்காருக்கு அறிவித்தால் பல நாட்களுக்குப் பின் "இப் பிரச்னை கவனத்தில் இருக்கிறது" என்ற பதில் மட்டும் தான் கிடைக்கிறது. ஆனால் இவர்கள் கப்பல் கம்பெனியாரை மக்கள் நலன் குறித்து வற்புறுத்தினால் நடக்காதது ஒன்றுமில்லை! வசதியான ஒரு கப்பலை இம்மார்க்கத்தில் விடச் சர்க்காரே ஏற்பாடு செய்யலாம். வருமானத்தையோ, நஷ்டத்தையோ சரிக் கட்டுவதற்கு வரி போடுவது போல் கப்பல் கட்டணத்தையும் உயர்த்தலாம்.

இரங்கோன்   ஆர். சக்ர பாண்டியன்,
11—4—56   எம். எஸ். ராமசாமி

## சிறு தவறு!

இவ்வாண்டு எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதிய பல்லாயிரக்கணக்கான மாணவர்களில் நானும் ஒருவன். கணக்குப் பரீட்சையில் தரும் விடைத்தாளிலுள்ள 'கிராப்' (Graph) பேப்பரில் உள்ள கோடுகள் சரியாகவே தெரியவில்லை. சில இடங்களில் கோடே இல்லை. அங்குலத்துக்கு அங்குலம் கோடு தடிப்பாகப் போடப்படவில்லை. தப்பித் தவறி கிராப் காகிதத்தில் கணக்குத் தப்பாகப் போட்டு ரப்பரால் அழித்தால் கோடுகள் எல்லாம் அழிந்து போயின. 'கிராப்' கணக்குச் சரியாகத் தெரிந்தவர்களும் கிராப் பேப்பர் சரியில்லாத காரணத்தால் கணக்குகளைத் தவறாகப் போட்டு விட்டு வந்திருக்கின்றனர். பதினோரு ஆண்டுகள் படித்து விட்டு முடிவாக எழுதும் எஸ். எஸ். எல். ஸி. தாளில் கிராப் பேப்பர் நன்றாய் இருக்கக் கூடாதோ!

சேலம்
15—4—56   எஸ். எம். வாசுதேவன்

## பரீக்ஷை வினாக்கள்

சென்னை நகரப் பள்ளிக்கூடம் ஒன்றில் ஐந்தாவது வகுப்புச் சிறுவர்களுக்குத் தமிழ்ப் பரீட்சை வினாத்தாளில் கீழ்க்கண்ட கேள்வி கொடுக்கப்பட்டிருக்கிறது.

"யமன் நமது உயிரைக் கவர்ந்து செல்ல வருமுன் நாம் என்ன செய்ய வேண்டும்!"

இந்தக் கேள்விக்குப் பதில் எழுத வேண்டிய சிறுவர்கள் பத்து அல்லது பன்னிரண்டு வயதுக் குட்பட்டவர்கள்.

வேதாந்த விசாரணையில் ஈடுபட்டவர்களின் சர்ச்சைக்கே விளங்காத இப் பெரும் கேள்வியும், அதற்குரிய விடையும், இளம் சிறுவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டியது தானா!

சென்னை
13—4—56   "விருச்சிகம்"





# பூனையும் குரங்கும்

ராஜாஜி

"அம்மா! அந்தப் பூனையைப் பார்" என்றது குரங்குக் குட்டி தாயைப் பார்த்து. "அது தன் குழந்தையை எப்படித் தூக்கிக் கொண்டு ஓடுகிறது பார். நான் உன்னைக் கையாலும் காலாலும் கட்டிக் கொண்டு தலைகீழாகக் கஷ்டப்பட வேண்டியது ஏன்?" என்று கேட்டது.

"தூக்கிப் பார்க்கட்டுமா உன்னை?" என்று தாய்க் குரங்கு குட்டியைக் கழுத்தைக் கவ்வித் தூக்கிற்று.

"ஈச்! ஈச்!" என்று கத்தி "வேண்டாம்" என்றது குட்டி. "ரொம்ப வலிக்கிறதம்மா. அந்தப் பூனைக் குட்டி எப்படியோ பொறுத்துக் கொள்கிறது. என்னால் முடியவில்லை."

"நான் உன்னைக் கவ்விக் கொண்டு மரம் ஏறினால் உனக்கு உடம்பெல்லாம் காயமுண்டாகிச் செத்துப் போவாய்" என்றது குரங்கு.

பூனையை ஒரு நாய் துரத்தி வந்தது. அது ஒரே பாய்ச்சலாக ஒரு வீட்டின் மேல் ஏறித் தப்பித்துக் கொண்டது. வாயில் கவ்வியிருந்த குட்டிக்கு ஒரு சேதமுமாகாமலே அப்படிக் குதித்து ஏறிக் கொண்டது.

இதையெல்லாம் இரு வைஷ்ணவ பிராம்மணர்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஒருவர் தென்கலை, மற்றொருவர் வடகலை சம்பிரதாயம்.

"இந்தப் பூனையைப் பார்த்தீரா, சுவாமி?" என்றார் தென்கலை பக்தர்.

"பார்த்தேன். குரங்கையும் பார்த்தேன்" என்றார் வடகலைப் பண்டிதர்.

"ஆண்டவன் கருணை இந்தப் பூனையின் உள்ளத்தைப் போல். நம்மை அவன் தானே தூக்கிக் காப்பாற்றுவான். நீயே கதி என்று சர்வமும் அவனிடம் நாம் ஒப்படைத்து விடவேண்டும்" என்றார் பக்தர்.

"அவ்விடம் சொல்வது சரியே. ஆயினும் குரங்குக் குட்டியைப் போல் நாம் ஆண்டவனைத் தழுவிக் கொண்டாலல்லவோ கடைத்தேறுவோம்?" என்றார் பண்டிதர்.

"உம்முடைய வேதாந்த தேசிகர் அப்படிச் சொல்லுகிறாரோ?" என்று கேட்டார் தென்கலை சுவாமியார்.

"ஆம்! சந்தேகமென்ன?" என்றார் வடகலையார்.

"நம்முடைய ஆழ்வார்கள் அப்படிச் சொல்லவில்லையே!" என்றார் தென்கலையார்.

இவர்கள் என்னவோ பேசுகிறார்கள் என்று குரங்கு கவனித்துக் கொண்டேயிருந்தது. தன்பேரில் கல்லை எறிந்து தொந்தரவு செய்வார்கள் என்று பயந்து, ஒரு ஓட்டை எடுத்துக் கீழே போட்டது.

"பார்த்தீரா, சுவாமி! உம்முடைய குரங்கின் சுபாவம்? கூரையைக் கெடுத்து மழை ஒழுகச் செய்கிறது. பூனையே மேல் அல்லவா?" என்று கேட்டார் தென்கலையார்.

"உம்முடைய பூனை பாலையும் நெய்யையும் திருடிப் பிழைக்கிறது. எலியைத்தின்று ஜீவிக்கிறது. கீழ்த்தரப் பிராணி. அதைப் பார்த்து பக்தி பிரவசனம் செய்கிறீரே! குரங்கல்லவோ உயர்ந்த ஜீவன். பழமும் காயும் அதன் போஜனம். பகவானுடைய சேவக வம்சம். உம்முடைய பூனையைக் கொளுத்தும்!" என்றார் வடகலையார்.

"என்னமோ பேசுகிறீர் சுவாமி! பூனையின் சுத்தம் உம்முடைய குரங்குக்கு உண்டா? நாள் தவறாமல் தன் நாக்



கைக் கொண்டு கங்கா ஸ்நானம் செய்கிறது. உம்முடைய குரங்கின் உடலெல்லாம் பேனும் அழுக்கும். கண்டவிடத்தில் ஜல மலம் கழிக்கிறது. பூனை தன் மலத்தைப் பிறர் காணுமல் மண்ணைப் போட்டு மூடுகிறது. ஆஹா! பூனையின் சுசி பிற பிராணிகளுக்கு உண்டோ! பாலைத் திருடுகிறது. வெண்ணெயைத் திருடுகிறது. உண்மை. அது நம்முடைய கண்ணனும் செய்தானல்லவா?"

கண்ணனுடைய கதையைச் சொன்னதும் வடகலையார் வாயைத் திறக்கவில்லை. 'இவருடன் பேசிப் பயனில்லை. பாவம். இவர் வேதாந்த தேசிகருடைய பிரபந்தங்களைப் படியாதவர்' என்று தமக்குள்ளே சொல்லிக்கொண்டு போகப் புறப்பட்டார்.

அப்போது இருவருக்கும் ரொம்ப வேண்டியவரான சந்திரசேகர சாஸ்திரியார் அங்கே வந்து சேர்ந்தார். 'இவர்கள் என்ன பூனையும் குரங்கும் என்று பேசிக் கொண்டிருக்கிருர்கள். சர்வமும் மாயம் என்பது இவர்களுக்குத் தெரியவில்லையே! தாயாவது குட்டியாவது, வீடாவது ஓடாவது இவையெல்லாம் பொய்யல்லவா?' என்று எண்ணிக் கொண்டு சிரித்தார்.

"என்ன சிரிக்கிறீர் சாஸ்திரிகளே?" என்றுர் வடகலையார்.

"இல்லை. இந்த வாதங்களெல்லாம் என்னத்துக்கு என்று சிரித்தேன். ஸ்ரீரங்கத்துக் கோயில் விவாதம் கோர்ட்டில் முடிவாச்சே? பார்த்தீர்களா?" என்றுர்.

"ஐயோ! பார்த்தேன்" என்றுர் வடகலையார். "இந்த அநியாயம் உண்டா?" என்று கேட்டார்.

"கோர்ட்டுக்குப் போனுல் அப்படித்தான் ஆகும்!" என்றுர் சாஸ்திரியார். அவர் குமாரர் கூனூரில் ஜட்ஜு வேலை.





## 42. சித்தப்பா




அந்த மனிதன் முரடர் கோஷ்டியைச் சேர்ந்தவன் என்று தெரிந்ததும், எல்லோருக்கும் ஒரே ஆச்சரியமாயிருந்தது. அதே சமயம் அவன் ரமணியைப் பார்த்து, "தம்பி ரமணி! நான் முரடர் கோஷ்டியைச் சேர்ந்தவன் என்பதைக் கேட்டதுமே எல்லோரும் ஆச்சரியப்படுகிறீர்கள். ஆனால், இதைக் காட்டிலும் மிகவும் ஆச்சரியமான ஓர் உண்மையை நான் இப்போது கூறப் போகிறேன்" என்றான். அவனால் வேகமாகவோ, பலமாகவோ பேச முடியவில்லை. தட்டுத் தடுமாறிச் சொல்ல ஆரம்பித்தான்.

"ரமணி, நீ பிறந்த வேலங்குறிச்சியிலேதான் நானும் பிறந்தேன்."

"அப்படியா! நான் பிறந்த ஊரில் தான் நீங்களும் பிறந்தீர்களா?"

"ஆம். அது மட்டுமல்ல; நீ பிறந்த குடும்பத்திலேதான் நானும் பிறந்தேன்" என்றான் சுப்பையா.

"நிஜமாகவா?"

"சத்தியமாகச் சொல்கிறேன். உன் அப்பாவும் நானும் உடன்பிறந்தவர்கள். நான் உன் சித்தப்பா."

"என் சித்தப்பாவா!" ரமணியின் ஆச்சரியம் பலமடங்காயிற்று. அதைக் கேட்டு மற்றவர்களும் அதே நிலையில் தான் இருந்தார்கள்.

சுப்பையா மேலும் சொல்ல ஆரம்பித்தான்.

"ரமணி, நீ ஆறு வயசுப் பையனாக இருந்த போது, நான் இந்த நாட்டுக்குப் புறப்பட்டு வந்தேன். ரங்கூனிலுள்ள ஒரு செட்டியார் கடையிலே கணக்குப் பிள்ளையாக வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது இரண்டாவது மகா யுத்தம் வந்தது. ஜப்பான்காரன் குண்டு மாரி பொழிந்து கொண்டிருந்தான். ரங்கூன் தலைநகரமாதலால், எந்த நேரத்திலும் தங்கள் மேல் குண்டு விழுந்து விடும் என்று அங்கிருந்த மக்கள் பயந்தார்கள். ஆகையால் நகரை விட்டுக் கிராமப் புறங்களை நோக்கி ஓடினார்கள். நானும் காட்டுப் புறத்திலுள்ள ஒரு குக்கிராமத்துக்குச் சென்றேன்."

சுப்பையா இப்படிக் கூறும்போதே ரமணி குறுக்கிட்டு, "ஆமாம், இப்போது நினைவுக்கு வருகிறது. அப்பா முன்பெல்லாம் அடிக்கடி உங்களைப் பற்றிச் சொல்லுவார். யுத்தத்திலே நீங்கள் குண்டுபட்டு இறந்து விட்டீர்களோ என்றுகூட அவர் சந்தேகப்பட்டார்" என்றான்.

"ரமணி, நான் குண்டுபட்டு இறந்திருந்தால்கூடத் தேவலை. இப்படிப்பட்ட கொடுமைகளைச் செய்யாமல் போயிருப்பேன். குக்கிராமத்தில் நான் தங்கியிருந்த போது சிலர் எனக்குச் சிநேகிதர்களானார்கள். அவர்களுடன் சேர்ந்து இந்தப் பாதகமான தொழிலில் ஈடுபட்டேன். பணக்காரர் வீட்டுப் பிள்ளைகளைத் தூக்கி வந்து ஒளித்து வைத்துப் பணம் பறிப்பதே எங்கள் வேலையாய்ப் போய் விட்டது. இதில் நல்ல வருமானம் கிடைத்ததால், ஊரை மறந்தேன்; உறவினரை மறந்தேன். பர்மாவிலுள்ள தமிழர் வீட்டிலே உளவு தெரிந்து வர என்னைத்தான் அனுப்புவார்கள். நீயும் சுந்தரமும் பணக்காரர் வீட்டுப் பிள்ளைகள் என்று உளவு சொன்னவன் நான்தான். உங்களைத் தூக்கிச் செல்வதற்கு உடந்தையாக இருந்தவனும் நான்தான். உன்னைச் சிற்சபேசனின் சொந்தப் பிள்ளை என்றே நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால், அன்று நள்ளிரவில் சுந்தரத்திடம் நீ உன் வர

வற்றைச் சொன்னாயே, அப்போது தான் எனக்கு உண்மை தெரிந்தது.''

சுப்பையா இதைச் சொன்னதும், "அப்படியானால், அன்று இரவு குகையில் நாங்கள் பேசியதை யெல்லாம் நீங்கள் கேட்டுக் கொண்டிருந்திருக்கிறீர்களா?'' என்றான் சுந்தரம்.

"ஆம், தம்பி! தற்செயலாகத் திரும்பிப் படுத்த என் காதில் மெதுவாக ஏதோ பேச்சுக்குரல் கேட்டது. உற்றுக் கேட்டேன். உண்மை தெரிந்தது... ரமணி, நீயோ என் சொந்த அண்ணன் மகன். உனக்கு அப்பா இல்லை. அம்மா இல்லை. உயிரோடு இருக்கும் சித்தப்பனும் உதவாமல் போனான். இந்த நிலையில் அனாதையாகத் திரிந்த உன்னை அருமையோடு வளர்த்து வருகிறார் சிற்சபேசன். அவரிடமிருந்து நாங்கள் உன்னைப் பிரித்தோம். மேலும், ரூபாய் பத்தாயிரம் தந்தால்தான் உன்னைத் திருப்பித் தருவோம் என்று அந்த நல்ல மனிதரை மிரட்டினோம். எவ்வளவு பாதகமான செயல்! இதை நினைக்கவே என் நெஞ்சு கூசுகிறது.''

இதற்கு மேல் சுப்பையாவால் பேச முடியவில்லை. தொண்டை அடைத்துக் கொண்டது. உடனே ரமணி ஓடிப் போய்த் தண்ணீர் வாங்கி வந்து அவனிடம் கொடுத்தான்.

சுப்பையா தண்ணீரைக் குடித்து விட்டுத் திரும்பவும் பேச ஆரம்பித்தான். ரமணியும் மற்றவர்களும் சுப்பையாவை ஓய்வெடுத்துக் கொள்ளச் சொன்னார்கள். ஆனால், அவன் கேட்கவில்லை. "எப்படியும் நான் சீக்கிரத்திலேயே செத்துப்போய் விடுவேன். சாகும்போதாவது நிம்மதியாகச் சாக வேண்டும் என்பதே என் ஆசை. எல்லாவற்றையும் உங்களிடம் சொன்னால்தான் அந்த நிம்மதி எனக்கு ஏற்படும்'' என்று கூறிவிட்டுத் தொடர்ந்தான்.

"ரமணி, குகையிலுள்ள இரும்புக் கதவுக்கு ஒரே மாதிரி நான்கு சாவிகள் உண்டு. நாங்கள் ஆளுக்கு ஒரு சாவி வைத்திருக்கிறோம். நீ என் அண்ணன் மகன் என்பது தெரிந்ததும், அன்று இரவே உன்னைக் காப்பாற்ற நினைத்தேன். நீயும் சுந்தரமும் பேச்சை முடித்து விட்டு எப்போது தூங்குவீர்கள் என்று எதிர்பார்த்துக் கொண்டே யிருந்தேன். நீங்கள் தூங்க ஆரம்பித்தீர்கள். தக்க சமயம் பார்த்து, குகைக் கதவைத் திறந்து உன்னைத் தூக்கி வந்து விட்டேன். பங்களா வராந்தாவில் உன்னைப் படுக்க வைத்து விட்டுத் திரும்பவும் குகைக்கு ஓடினேன். ஒன்றும் தெரியாதவன் போல் படுத்துக் கொண்டேன். மறுநாள் காலையில் உன்னைக் காணாததும் அவர்கள் திடுக்கிட்டார்கள். ஆனாலும், என் மேல் அவர்களுக்கு எள்ளளவு சந்தேகமும் ஏற்படவில்லை. என்னையே விஷயத்தை அறிந்து வர வெளியில் அனுப்பினார்கள். செருப்புத் தைப்பவன் போல் வேஷம் போட்டுக் கொண்டு போகும்படி தலைவன் சொன்னான். ஆனால், அந்த வேஷத்தில் உங்கள் வீட்டுக்கு வரவில்லை.

"கிழவரைப் போல் நான் வேஷம் போட்டுக் கொண்டு வந்தேன். உன்னைப் பார்க்கப் பார்க்க என் உள்ளம் பூரித்தது. உன் கதைகளை முன் வரிசையில் உட்கார்ந்து கேட்கக் கேட்க எனக்கு ஒரே ஆனந்தமா யிருந்தது. ஆனால், திடீரென்று நீ கதையை நிறுத்தி விட்டாய். காரணம் தெரிந்தது. உன் அருமை நண்பன் சுந்தரம் குகையில் இருப்பதை நினைத்தே நீ கவலைப்படுகிறாய் என்று அறிந்தேன். அவன் கட்டாயம் மறுநாள் காலைக்குள் வந்து விடுவான் என்று நான் ஜோஸ்யம் கூடச் சொன்னேன். ஆனால், சொல்லி விட்டு நான் சும்மா இருக்கவில்லை. உன் ஆசையைப் பூர்த்தி செய்ய நேற்று இரவே அங்கு சென்றேன். நள்ளிரவில் ஒரு தாடிப் பரதேசி போல் வேஷம் போட்டுக் கொண்டு சுந்தரத்தைத் தூக்கிக் கொண்டு கிளம்பினேன். ஆனால், எதிர்பாராத விதமாகத் தலைவன் விழித்துக் கொண்டு விட்டான். உடனே கூச்சல் போட்டு மற்றவர்களோடு என்னைத் துரத்தினான். கல்லால் அடித்தான். காயப் படுத்தினான். ஆனாலும், சுந்தரத்துக்கு ஒரு காயமும் இல்லாமல் பத்திரமாகக் கொண்டு வந்து சேர்த்து விட்டேன். நான் எத்தனையோ பாதகச் செயல்களை யெல்லாம் செய்திருக்கிறேன். ஆனாலும், கடைசிக் காலத்திலாவது ஒரு நல்ல காரியம் செய்தேனே, அதுவே எனக்கு மிகவும் ஆறுதலாக இருக்கிறது.''



யானை உருவம் தெரிகிறதா? திருப்பிப் பாருங்கள், அன்னம் தெரியும்.

# குட்டித் தமாஷ்



"அவர் இந்த உலகத்தில் எல்லாவற்றையும் துறந்து சன்யாசம் வாங்கிக் கொண்டு விட்டார்!"

"எல்லாவற்றையும் துறந்தவர் சன்யாசத்தை மட்டும் ஏன் வாங்கிக்கொண்டார்! அதையும் துறந்து விடுவதுதானே!"

* * *

ஜட்ஜ்: தான் குற்றவாளிதான் என்று அவனே ஒத்துக்கொள்ளும்போது நீங்கள் ஏன் 'இல்லை' என்று வாதாடுகிறீர்கள்!

வக்கீல்: அதை நம்பாதீங்க. அப்படிச் சொல்லி எனக்குப் பீஸ் கொடுக்காமல் தப்பித்துக் கொண்டு ஜெயிலுக்குப் போகப் பார்க்கிறான்!



* * *



"ஆட்டுக்கெல்லாம் மூளை கிடையாதாமே!"

"அப்படின்னு யாராவது மூளையில்லாதவன் சொல்லியிருப்பான். அதையெல்லாம் நம்பாதே."

"இல்லை; நம்ப அப்பாதான் சொன்னார்."

---

சுப்பையா கூறியதைக் கேட்கக் கேட்க எல்லோருடைய ஆச்சரியமும் அதிகமாகிக் கொண்டேயிருந்தது. சப்-இன்ஸ்பெக்டரும் ஆச்சரியத்துடனே அவன் இதுவரை கூறியதையெல்லாம் குறித்துக் கொண்டார். பிறகு, "சுப்பையா, உன்னிடம் ஒன்று கேட்கவேண்டும். உன் கோஷ்டியார் இதுவரை எத்தனை பிள்ளைகளைத் தூக்கிச் சென்றிருப்பார்கள்?" என்று கேட்டார்.

"சுமார் அறுபது இருக்கலாம். ஆனாலும், நாங்கள் ஒரு பழக்கம் வைத்திருந்தோம். நாங்கள் சொல்லும் இடத்தில் பணத்தை வைத்து விட்டால், பணத்தை எடுத்துக் கொண்டு, தூக்கி வந்த பிள்ளைகளைத் திருப்பி அனுப்பி விடுவோம். இப்போது ஒரு குழந்தை கூட அக் குகையில் இல்லை."

"கடிதம் கிடைத்த அன்றைக்கே குறிப்பிட்ட மரப்பொந்தில் பத்தாயிரத்தைக் கொண்டு போய் வைத்தோம். ஆனாலும், சுந்தரத்தைத் திருப்பி அனுப்பவில்லையே!" என்றார் தாமோதரம்.

"அப்படியா? பணம் மரப்பொந்துக்கு வரவில்லையே!" என்றான் சுப்பையா.

உடனே தாமோதரம் "ஏண்டா, கந்தசாமி! உன்னிடம்தானே கொடுத்து அனுப்பினேன்?" என்று கேட்டுக் கொண்டே, தன்னுடன் வந்த தேக்கு மரக் காட்டு மேஸ்திரியான கந்தசாமி நின்ற பக்கம் திரும்பினார். அப்போது அவன் மெதுவாக நழுவப் பார்த்தான். உடனே 'குப்'பென்று பாய்ந்து அவன் கழுத்தைப் பிடித்துக் கொண்டார். பிறகு, போலீஸார் அவனை உதைத்துக் கேட்டதில் உண்மை வெளியாயிற்று. எஜமானை ஏமாற்றிப் பணத்தை ஏப்பம் விட்டு விட்டான் அந்தத் துரோகி! அங்கேயே அவனுக்கு விலங்கு மாட்டினார்கள் போலீஸ்காரர்கள்.

கந்தசாமியைக் கைது செய்த பிறகு, சப் - இன்ஸ்பெக்டர் சுப்பையாவைப் பார்த்து, "சுப்பையா! இப்போது உன்னைச் சேர்ந்தவர்கள் எங்கே இருப்பார்கள்? அதை மட்டும் சொல்லு" என்று கேட்டார்.

"இதோ அதையும் சொல்லத்தான் போகிறேன். இனிமேலாவது இப்படிப் பட்ட நல்ல பிள்ளைகள் அவதிப்படாமல் இருக்கட்டும். என் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் வழக்கமாக இருக்கும் குகையில் இப்போது இருக்க மாட்டார்கள். ஆபத்து வரும்போல் தோன்றினால், ஒளிந்து கொள்வதற்கு வேறொரு குகை இருக்கிறது. அங்கேதான் இப்போது இருப்பார்கள்" என்று கூறி, அந்தக் குகை இருக்கும் இடத்தையும் விவரமாகத் தெரிவித்தான்.

பிறகு, சிற்சபேசனைப் பார்த்து, "தயவு செய்து என்னை மன்னித்து விடுங்கள். வீண் சிரமம் கொடுத்து விட்டேன். ரமணியிடம் நீங்கள் அதிகமான அன்பு வைத்திருக்கிறீர்கள். இந்த அன்பு வளர ஆண்டவனைப் பிரார்த்திக்கிறேன்" என்று வணக்கத்தோடு கூறினான். அதற்கு மேல் அவனால் பேசமுடியவில்லை. உணர்ச்சி அதிகரித்தது. நெஞ்சு அடைத்துக் கொண்டது. ஆ! மறு நிமிஷம் சுப்பையாவின் மூச்சு நின்று போய்விட்டது. (அடுத்த இதழில் முடியும்)

ருஷ்ய நாட்டு நாடோடிக் கதை

# இளவரசி மரியா



3

ராக்ஷசப் பூனை ஆண்டிரியின் காலில் விழுந்து உயிர்ப் பிச்சை கொடுக்குமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டது.

"ஐயா, என்னை அடிக்காதே! தொந்தரவு செய்யாதே! என் கழுத்தைப் பற்றியிருக்கும் இடுக்கியைத் தளர்த்துங்களேன். நீங்கள் சொல்லுகிறபடியெல்லாம் கேட்கிறேன்" என்றது பயங்கரப் பூனை.

"அப்படியானால் நீ என்னுடன் வருவாயா?" என்று கேட்டான் ஆண்டிரி.

"எங்கே வேண்டுமானாலும் வருகிறேன்" என்றது பூனை.

இதைவிட வேறு என்ன வேண்டும்? தான் வந்த காரியம் வெற்றியுடன் முடிவடைந்தது என்ற மகிழ்ச்சியுடன், ஆண்டிரி இந்தப் பூனையை அழைத்துக் கொண்டு தன்னுடைய சொந்த நாட்டுக்கு வேகமாகத் திரும்பினான்.

ஊரை அடைந்ததும் முதல் காரியமாக அரண்மனைக்குப் போனான். அங்கு ஸாரைப் பேட்டி கண்டு, "மகாராஜா! தாங்கள் எனக்குக் கட்டளையிட்ட பணியைச் செய்து முடித்துவிட்டேன். இதோ ராக்ஷஸப் பூனையைக் கொண்டு வந்திருக்கிறேன், பாருங்கள்!" என்றான்.

அரசனுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. உண்மையிலேயே ராக்ஷஸப் பூனையைத்தான் பார்க்கிறோமா என்று சந்தேகம் வந்து விட்டது. நடக்க



விஜயா

மொழிபெயர்ப்பு: எஸ்.வி.எஸ்.

முடியாத காரியம் என்று அவ்வளவு நிச்சயமாக இருந்தான் ஸார். அது நடந்து விட்டது என்றும் போது இப்படியெல்லாம் சந்தேகங்கள் எழுவது இயல்புதானே?

பிறகு பூனையைப் பார்த்து, “பூனையாரே! வருக! வருக! உம் வரவு நல் வரவு ஆகுக! நீர் ரொம்பக் கோபக்காரராமே! எங்கே உம்முடைய கோபத்தையும் ஆங்காரத்தையும் காட்டும், பார்ப்போம்!” என்று கேலியும் பரிகாசமுமாகப் பேசினான் ஸார்.

அவ்வளவுதான். ராக்ஷஸப் பூனைக்கு உண்மையிலேயே அளவு கடந்த கோபம் வந்து விட்டது. தன் கூரிய நகங்களை விரித்தது. கண்களில் கனல் பொறி பறந்தது. அரசன் மார்பைப் பிளந்து இதயத்தையே வேறாக எடுத்து வைப்பதற்குத் தயாராகி விட்டது.

இந்தக் கோரக் காட்சியைக் கண்டு ஸார் நிலைகுலைந்து போனான். தேகமெல்லாம் பயத்தில் பதறியது.

“ஆண்டிரி! ஆண்டிரி! ராக்ஷஸப் பூனையைச் சாந்தப்படுத்தேன்! எனக்குப் பயமாக இருக்கிறது” என்று அலறினான் ஸார் அரசன்.

ஆண்டிரி வெகு அலட்சியமாக அதன் கோபத்தை அடக்கி, ஒரு கூண்டில் அடைத்தான். பின்னர் அரசனிடம் விடை பெற்றுக் கொண்டு தன்னுடைய வீட்டுக்குத் திரும்பினான்.

அவன் மனைவி இளவரசி மரியா ஏற்கனவே தன் கணவன் வெற்றியுடன் ஊருக்குத் திரும்பியதைக் கேள்விப்பட்டிருந்தாள். அதனால் தன் கணவனைக் கண்டதும் முகத்தில் ஆனந்தப் புன்னகை மலர வரவேற்று உபசரித்தாள். இருவரும் சந்தோஷமாக வாழ்ந்து வரலானார்கள்.

* * *

ஆனால் இந்தச் சந்தோஷ வாழ்க்கை அதிக நாள் நீடிக்கவில்லை. ஏனெனில், ஸாரின் நிலைமை வேறுவிதமாயிருந்தது. அவனுடைய காதல் நோய் முன்னைவிட மிகவும் அதிகமாகி விட்டது. தாங்க முடியவில்லை. தன் மந்திரியை உடனே வரும்படி சொல்லியனுப்பினான். “மந்திரி! இந்த ஆண்டிரியை ஒழித்துக் கட்டி மரியாவை நான் அடைய வழி சொல்ல மாட்டேன் என்கிறாயே! எனக்கு இப்போதே ஒரு புது வழி சொல்ல வேண்டும். இல்லையென்றால் உன்னைக் கொன்று தீர்த்து விடுவேன்!” என்று பயமுறுத்தினான்.

மந்திரி நேரே ஹோட்டலுக்குப் போனார். அங்கே அந்தப் பழைய சோம்பேறியைத் தேடிப் பிடித்தார். அவனிடம் தமக்கு ஏற்பட்டுள்ள புதுக் கஷ்டங்களை விவரித்துக் கூறி, அதிலிருந்து விடுபட வழி சொல்லும்படி கெஞ்சிக் கேட்டார்.

சோம்பேறி கெட்டிக்காரன். அவன் இதுதான் சமயம் என்று மந்திரி செலவில் தனக்கு வேண்டியதையெல்லாம் வாங்கிச்





சாப்பிட்டு, மீசையைத் துடைத்து விட்டுக் கொண்டான். பிறகு பேச ஆரம்பித்தான்:

"மந்திரி, இப்போதே நீங்கள் மன்னனிடம் போங்கள். ஆண்டிரியை வரவழைக்கச் சொல்லுங்கள். அவன் வந்தவுடன், அவனைப் போய், 'எங்கிருப்பது என்பதும் தெரியாது, என்ன பொருள் என்றும் தெரியாது' என்பதைக் கொண்டு வரும்படி கட்டளையிடச் சொல்லுங்கள். பிறகு அவன் திரும்பி வருவது ஏது?" என்றான்.

உடனே மந்திரி அரண்மனைக்கு ஓடினார். மன்னனிடம், அந்தச் சோம்பேறி சொன்னதை அப்படியே வார்த்தைக்கு வார்த்தை சொன்னார். அரசன் ஆண்டிரியை வரவழைக்க அந்த நிமிஷமே ஆளை அனுப்பினான்.

ஆண்டிரிவந்ததும் மன்னன், "ஆண்டிரி! நீ எனக்கு இரண்டு அருமையான பணிகள் புரிந்தாய். இப்பொழுது மூன்றாவதாக ஒரு வேலையிருக்கிறது. அதையும் நீ செய்ய வேண்டும். நீ போய் 'எங்கிருப்பது என்பதும் தெரியாது, என்ன பொருள் என்றும் தெரியாது' என்பதைக் கொண்டு வர வேண்டும். இதைச் செய்தாயானால், உனக்கு வேண்டிய வெகுமதிகள் தருவேன். இல்லையேல் உன்னுடைய தலையைச் சீவி விடுவேன்!" என்றான்.

ஆண்டிரி வீட்டுக்குத் திரும்பினான். ஒரு பெஞ்சியின் மீது உட்கார்ந்து அழ ஆரம்பித்து விட்டான். இவன் அழுகை இளவரசி மரியா காதில் விழுந்தது. அவள் விழுந்தடித்துக் கொண்டு அவனிடம் ஓடி வந்தாள்.



"அன்பே! ஏன் அழுகிறீர்கள்? ஏன் இவ்வளவு துயரம்? இப்பொழுது என்ன கஷ்டம் நேர்ந்திருக்கிறது? எனக்குச் சொல்லுங்கள்!" என்றாள் மரியா.

"என்னவென்று சொல்லுவேன்! எல்லாக் கஷ்டங்களும் உன் அழகின் காரணமாக நேர்கின்றன. உன் அழகிய வதனமே என்னுடைய அழிவுக்குக் காரணமாகி விடும் போலிருக்கிறது!

"இந்தத் தடவை அரசர் என்னை 'எங்கிருப்பது என்பதும் தெரியாது, என்ன பொருள் என்றும் தெரியாது' என்பதைக் கொண்டு வரச் சொல்லி உத்தரவிட்டிருக்கிறார்!" என்றான் ஆண்டிரி.

"ஐயோ! இது கொஞ்சம் கஷ்டமான காரியமாயிற்றே! எனினும் வருத்தப்படாதீர்கள். இன்றிரவு நீங்கள் நிம்மதியாகப் படுத்துத் தூங்குங்கள். நான் ஏதாகிலும் வழி புலப்படுகிறதா என்று பார்க்கிறேன். ஏனெனில் இரவுதான் யோசனைகளுக்குத் தாய்" என்று கூறினாள்.

ஆண்டிரி படுத்துக் கொள்ளப் போய் விட்டான். இளவரசி மரியா தூங்கவில்லை. தன் மந்திர-தந்திர புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்தாள். ஒரு பக்கம் விடாமல் படித்துப் பார்த்தாள். ஒன்றும் பயனில்லை. ஆம், 'எங்கிருப்பது என்பதும் தெரியாது; என்ன பொருள் என்றும் தெரியாது' என்பதைப் பற்றி அந்தப் புஸ்தகத்தில் ஒரு வரிகூட இல்லை. இதனால் அவளுக்கு ஏற்பட்ட ஆத்திரத்தில் அதைத் தூர எறிந்து விட்டுத் தலையில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டாள்.

எத்தனை நாழிகை இப்படி உட்கார்ந்திருக்கமுடியும்? வேறு வழி வகைகள் கண்டு பிடித்து ஆக வேண்டுமல்லவா? அதனால் எழுந்திருந்தாள். தன் வீட்டு வாசலண்டை போய் நின்று கொண்டாள். தன் கைக்குட்டையை எடுத்துவீசினாள். ஒரு முறை வீசினாள். அவ்வளவுதான். உலகிலுள்ள அத்தனை வித பறவைகளும் அங்கு பறந்து வந்து கூடிவிட்டன. மிருகங்களும் கூட்டங் கூட்டமாகக் கூடி விட்டன.

இளவரசி மரியா, "வனத்தில் வாழும் மிருகங்களே! வானத்தில் பறக்கும் பறவைகளே! நீங்கள் எல்லோரும் பூமியிலும் வானத்திலும் 'எங்கிருப்பது என்பதும் தெரியாது என்ன பொருள் என்றும் தெரியாது' என்பதைத் தேடிக் கண்டு பிடியுங்கள்!" என்றாள்.

இதைக் கேட்ட பறவைகளும் பிராணிகளும், "இளவரசியே! எங்களால் இந்தக் காரியம் ஆகாது!" என்று ஒரே அடியாக மறுத்துக் கூறி விட்டன.

இளவரசி மரியாவுக்குப் பெருத்த ஏமாற்றமாகப் போய்விட்டது. அவள் தன் கைக்குட்டையை மீண்டும் வீசினாள். புள்ளினங்களும் விலங்கினங்களும் வந்த அடிச்சுவடு கூடத் தெரியாமல் மறைந்தன.



குழந்தைகளையும் சிறுவர்களையும் பேரானந்தத்தில் ஆழ்த்துவது பொம்மைகளும் விளையாடுவதற்குரிய பொருள்களும். இந்தப் பொம்மைகள் எல்லாம் முன்பு வெளிநாடுகளிலிருந்துதான் இறக்குமதியாகி வந்தன. இப்பொழுது சென்ற பதின்மூன்றாண்டுகளாக மேல் நாட்டு அழகிய பொம்மைகளுக்கு இணையாகத் தமிழ் நாட்டில் செய்யப்படுகிறது என்றால் வியந்து போவீர்கள். "எங்கே செய்கிறார்கள்?" என்று கேட்பீர்கள். சென்னை கிண்டியில் திரு கோபாலன் இத்தகைய பொம்மை செய்யும் தொழிற்கூடத்தை வெகு வெற்றிகரமாக நடத்தி வருகிறார். சுமார் 180 சிறுவர்கள் இச் சிறு தொழிற்சாலையில் வேலை செய்கிறார்கள். 250 க்கு மேற்பட்ட பொம்மை வகைகளும் விளையாடும் கருவிகளும் செய்கிறார்கள். இந்தத் தொழிற் கூடத்தைச் சென்னை கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசாவும், நிதிகமிஷன் தலைவர் திரு கே. சந்தானமும் பார்வையிட்டு அகமகிழ்வதை மேலேயுள்ள படத்தில் காணலாம்.

மூன்றாவது தடவையாக முயற்சி செய்வதென்று கைக் குட்டையை ஆட்டினான். இரண்டு பூதங்கள் தோன்றின. அவை இளவரசி மரியாவைப் பார்த்து, "தங்கள் விருப்பம் யாது? தங்கள் கட்டளை என்ன?" என்று கேட்டன.

"என் நன்றி மிக்க சேவகர்களே! என்னை நடுக் கடலுக்குத் தூக்கிச் செல்லுங்கள்!" என்றான்.

பூதங்கள் இளவரசி மரியாவைத் தூக்கிக் கொண்டன. நேரே நடுக்கடலுக்குப் போய் விட்டன. கடலில் அந்த இரண்டு பெரிய பூதங்களும் இரண்டு பெரிய தூண்கள் போல் நின்று கொண்டன. அவைகளின் கைகளில் மரியா உட்கார்ந்து கொண்டான். தன் கைக்குட்டையை எடுத்து வாகவமாக வீசினான். கடலில் வாழ் மீன்கள், மற்ற ஜந்துக்கள் எல்லாம் கடலின் ஆழத்திலிருந்து மேலே எழுந்து வந்து இளவரசி மரியாவைச் சூழ்ந்து கொண்டன.

"மீன்களே! மற்றுமுள்ள நீர் வாழ் பிராணிகளே! நீங்கள் சமுத்திரங்களின் மூலை முடுக்குகளில் எல்லாம் நீந்திச் செல்லுங்கள்! தீவுகளில் எல்லாம் தேடிப் பாருங்கள். ஒரு வேளை உங்களால் 'எங்கிருப்பது என்பதும் தெரியாது; என்ன பொருள் என்றும் தெரியாது' என்பதைக் கண்டு பிடிக்க முடியலாம்!" என்றான்.

"இளவரசி! நாங்கள் அப்படியொரு இடம் இருப்பதாகவோ பொருள் இருப்பதாகவோ கேள்விப்பட்டது கூட இல்லையே!" என்று கூறி விட்டன.

மரியாவுக்கு முன்னைவிட பெரிய ஏமாற்றமாகி விட்டது. அவன் அடைந்த வருத்தம் கொஞ்சநஞ்சமல்ல. இனி அங்கிருப்பது உசிதமில்லை யென்று மரியா பூதங்களைப் பார்த்துத் தன்னை வீட்டில் கொண்டு போய் விடும்படி கூறினான். அவைகளும் அப்படியே கொண்டு போய் விட்டு விட்டன.

மறு நாள் இளவரசி மரியா வழக்கம் போல் விடியற் காலை எழுந்திருந்தான். ஆண்டிரி அன்று அவன் பிரயாணத்தைத் தொடங்கியாக வேண்டும். அவனை வழியனுப்பத் தயாரானான். அதாவது அவனுக்கு அழகான பூ வேலை செய்த ஒரு துண்டும் நூல் கண்டும் கொடுத்து அனுப்புவது என்று தீர்மானித்தாள்.

"இந்த நூல் பந்தை முன்னால் எறிந்து விட்டு, அது எங்கெல்லாம் போகிறதோ அங்கெல்லாம் தொடர்ந்து பின்னால் போங்கள்! அப்புறம், எங்கெல்லாம் முகம் கை கால் கழுவிக் கொள்ளுகிறீர்களோ அங்கெல்லாம் நான் கொடுக்கும் துண்டைக் கொண்டே முகம் உடம்பெல்லாம் துடைத்துக் கொள்ளுங்கள். மற்றத் துண்டு எதையும் உபயோகிக்காதீர்கள். ஜாக்கிரதை!" என்று பரிவுடன் கூறியனுப்பினான்.

'சரி' என்று சொல்லி அவற்றை வாங்கிக் கொண்டான். அவளிடம் விடைபெற்றுக் கொண்டான். பிறகு காவா இசைகளுக்கும் வணக்கம் செலுத்தி விட்டு நேரே ஊரின் பெரிய கோட்டை வாசல் வழியாக வெளியே போனான்.

அவன் அந்த நூல்கண்டை எறிந்தான். அது உருண்டு உருண்டு முன்னால் ஏகிற்று. ஆண்டிரி அதைத் தொடர்ந்து பின்னால் விரைவாகச் சென்றான்!



பம்பாய் சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியாவைச் சேர்ந்த ஸ்ரீ கே. ஆர். சங்கரநாராயண அய்யர் அவர்களின் குமாரி சௌபாக்கியவதி ராஜத்திற்கும் சிரஞ்சீவி ஆர். ராமசுப்ரமணியத்துக்கும் சமீபத்தில் பம்பாய் மாதுங்காவில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

கதை சொல்லப் போனால் சுருக்கமாகத் தான் இருக்கும்! ஆனால் அவன் புரிந்த தீரச் செயல்களுக்கு எத்தனை காலம் பிடித்தது! எத்தனையோ வகை நாடுகளையும் ராஜ்யங்களையும் கடந்து சென்றான். நூல் கண்டிலுள்ள நூல் எல்லாம் அவிழ்ந்து போய்ச் சிறிய கோழி முட்டையளவு ஆகிவிட்டது. ஏன், அது இன்னும் சிறிதாகிக் கண்ணுக்குக்கூடத் தெரியாத அளவுக்கு வந்து விட்டது.

இந்த நிலையில் ஆண்டிரி ஒரு கானகத்துக்கு வந்தான். அங்கு ஒரு பெட்டைக் கோழியின் மீது ஒரு சின்னஞ் சிறு குடிசை இருப்பதைப் பார்த்தான். அது சுழன்று கொண்டிருப்பது தெரிந்தது.

"குடிசையே! குடிசையே! உன் முதுகைக் காட்டு. மரங்களின் பக்கம் கண் பித்து, நீ என்னைப் பார்க்க மாட்டாயா?" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

குடிசை ஒரு சுற்றுச் சுற்றி அவன் முன் வந்தது. ஆண்டிரி உள்ளே நுழைந்தான். குடிசையில் ஒரு கிழவி உட்கார்ந்திருப்பதைப் பார்த்தான்.

"உஸ்......உஸ்......ருஷ்ய இரத்தத்தைப் போல் அல்லவா வாசனை வருகிறது. இதை இதற்குமுன் எப்போதும் முகர்ந்ததாகத் தெரியவில்லையே! வருவது யார்? எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கே போக வேண்டும்? யாரானால் என்ன? உன்னை உயிரோடேயே பொசுக்கிச் சாப்பிட்டு, உன் எலும்புகளின் மீது சவாரி செய்யப் போகிறேன்!" என்றாள்.

இதற்கு ஆண்டிரி "பாபாயாகா! போயும் போயும் ஒரு வழிப் போக்கனையா சாப்பிட வேண்டும் என்கிறாய்! நான் ஒல்லியாக இருக்கிறேன்; என்னைச் சாப்பிடுவது சுலபமல்ல! எனினும் முதலில் நான் குளிக்கவேண்டும். என்னைக் குளிப்பாட்டிச் சுத்தம் செய்துவிட்டுச் சாப்பிடு!" என்றான்.

பாபாயாகா அப்படியே அவன் குளிப்பதற்கு வெந்நீர் தயார் செய்தாள். ஆண்டிரி குளித்துவிட்டுத் தன் மனைவி கொடுத்து அனுப்பிய துண்டை எடுத்து உடம்பைத் துடைத்துக் கொண்டான்.

அந்தத் துண்டைப் பார்த்துவிட்ட மந்திரவாதிக் கிழவி பாபாயாகா, "இந்தத் துண்டு உனக்கு எப்படிக் கிடைத்தது? இதில் உள்ள பூவேலைகள் என் மகள் செய்தவையல்லவா!" என்றாள்.

"உன்னுடைய மகள்தான் என் மனைவி. அவள்தான் எனக்கு இந்தத் துண்டைக் கொடுத்தாள்!" என்றான்.

"ஹா! நீ என் மருமகனா! வாங்க! வாங்க!" என்று புது உற்சாகத்துடன் வரவேற்றாள் பாபாயாகா.

அந்த உற்சாகத்தில் அறுசுவை யுண்டி தயாரித்து, ஆண்டிரிக்குப் பரிமாறினாள். ஆண்டிரி ஒரு வார்த்தை பேசாமல் சாப்பிடத் தொடங்கினான். பாபாயாகா அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு எப்படி இளவரசி மரியாவை மணந்து கொள்ள நேர்ந்தது, அவர்கள் சந்தோஷமாகக் குடித்தனம் நடத்துகிறார்களா என்றெல்லாம் கேட்கத் தொடங்கினாள். ஆண்டிரி எல்லா விவரங்களையும் சொன்னான். கடைசியில் ஸார் தன்னை, 'எங்கிருப்பது என்பதும் தெரியாது, என்ன பொருள் என்றும் தெரியாது' என்பதைக் கொண்டு வரும்படி பணித்திருப்பதையும் கூறினான். "மாமி, நீங்கள் மட்டும் இந்தக் காரியத்தில் எனக்கு உதவினால் எவ்வளவு நன்றாக இருக்கும்!" என்றான்.

"ஹா! மாப்பிள்ளை! நான் கூட இப்படியொன்று இருப்பதாகக் கேள்விப் பட்டதில்லையே! ஆனால் இதைப் பற்றி யாருக்காகிலும் ஏதாகிலும் தெரியும் என்றால், ஒரு கிழத் தவளைக்குத்தான் தெரிய வேண்டும். ஏனெனில் அது மூந்நூறு ஆண்டுகளாக வாழ்ந்து வருகிறது. அதற்குத்தான் தெரிந்திருக்க வேண்டும். அதைக் கண்டு பிடிப்பது கஷ்டம். இருந்தாலும் பரவாயில்லை. இப்போது கவலைப் படாமல் போய்ப் படுத்துத் தூங்குங்கள். ஏனெனில் இரவுதான் யோசனைகளுக்குத் தாய்!" என்றாள்.

ஆண்டிரி படுக்கப் போனான். பாபாயாகா இரண்டு துடைப்பங்களைக் கொண்டு வந்தாள். அதன் மீது ஏறிக் கொண்டு வேகமாகப் பறந்தாள். (தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk Madras - 10. Editor: Mi. Pa, Somasundaram

'ஹா! லைப்பாய் சோப்
உபயோகித்துக் குளிக்க
வேண்டிய நேரம் இதுதான்!'

– அது சரீரத்தை
சுத்தமாக்குவதுடன்
புத்துணர்ச்சியைத்
தருகிறது!




இந்தியாவில் தயாரித்தது L. 259-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# நான் சலவை செய்யவே துணியாத துணிகளை—இப்போது லக்ஸ் உபயோகித்து நிர்ப்பயமாக சலவை செய்கிறேன்

உதாரணமாக, புடவைகள், உங்களிடமுள்ள மிகமிக மென்மைவாய்ந்த அருமையான சேலைகளைக்கூட—நேர்த்தியான பட்டு, பருத்தி, ஜார்ஜெட்டுக்கள், க்ரேப்புகள், சிப்பான்கள், நினன்கள் — அநேகமாக எல்லாவற்றையும் வீட்டிலேயே பத்திரமாகவும், சுலபமாகவும் சலவை செய்து வெற்றி காணமுடியும். அதற்கு நீங்கள் உபயோகிக்க வேண்டியது தூய்மையுள்ள மென்மையான லக்ஸ்.



**இலவசம்!**

உபயோகமுள்ள சிறுசிறு புத்தகங்களான "நேர்த்தியான துணிகளைச் சலவைச் செய்ய சரியான வழி", "சேலைகளை சலவை செய்ய சரியான வழி" என்பவை உங்களுக்கு இலவசமாகக் கிடைக்கும். தபால் பெட்டி நம்பர் 409, பம்பாய் 1, என்ற விலாசத்துக்கு எழுதி, லக்ஸ் அட்டைப்பெட்டியின் மேல் மூடியிலுள்ள பாப்பா படம் போட்ட பாகத்தைக் கடிதத்துடன் இணைத்து அனுப்புங்கள்.












**அழகான ஆடைகளுக்கு நெடுங்காலம் புதுமைத்தோற்றம் அளிப்பது லக்ஸ்**

LX. 133-50 TM